# கலியமான் யாத்திரை

ஜோனதான் ஸ்வீப்ட் எழுதிய
கல்லிவர்ஸ் ட்ராவல்ஸ் தழுவியது.

எழுதியவர்:
**சந்திரமோகன்**




67. வன்னியர் தெரு. சூளைமேடு. சென்னை-94

## நூலைப் பற்றிய விபரங்கள்




| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | கலியமான் யாத்திரை |
| ஆசிரியர் | : | சந்திரமோகன்<br>67 வன்னியர் தெரு<br>சூளைமேடு.<br>சென்னை-600094. |
| வெளியிடுபவரும் உரிமையாளரும் | : | தாமரை நூலகம்<br>67 வன்னியர் தெரு<br>சூளைமேடு<br>சென்னை-600094. |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | இரண்டாம் பதிப்பு |
| வெளியிடும் காலம் | : | ஜனவரி 1988. |
| உபயோகப்படுத்தப் பட்ட தாள் | : | 10. 9 கிலோ<br>வெள்ளைத்தாள். |
| புத்தகத்தின் அளவு | : | 18 செ. மீ நீளம்<br>12 ½ செ. மீ. அகலம் |
| எழுத்துக்களின் அமைப்பு | : | 10 பாயிண்ட் |
| பக்கங்கள் | : | 80 |
| விலை | : | 4-35 |
| அச்சிட்டவர் | : | ப்ரிண்ட்ஸ் டி'லைட்'<br>67 வன்னியர் தெரு<br>சூளைமேடு.<br>சென்னை-600094. |
| ஓவியர் | : | சிவராஜ் |
| பொருள் | : | நவீனம். |

## முதல் பாகம்

### கலியமான் விரல் மனிதர்களிடையே வசித்த வரலாறு

### 1

தென் பாண்டி நாட்டில் விவசாயக் குடும்பத்தில் நான்கு சகோதரர்களுடன் பிறந்தவன் கலியமான். அவன் தந்தை ஏழை விவசாயி. ஆதலால் ஐவரையும் அவரால் படிக்க வைக்க முடியவில்லை. ஆனால் கலியமானே சிறு வயது முதலே விவசாய வேலைகளில் ஈடுபடாமல் படிப்பிலேயே கவனமாக இருந்தான். மருத்துவம் பயின்று பல நாடுகளிலும் சென்று பணி புரிய வேண்டும் என்ற உயர்ந்த இலட்சியம் இளம் வயது முதலே கலியமான் உள்ளத்தில் ஆழப் பதிந்திருந்தது. அக்காலத்தில் மருத்துவர்களுக்கு அதிக மதிப்போ செல்வாக்கோ கிடையாது. ஆனால் கலியமான் மருத்துவம் படித்து முடித்தபோது கடற்பிரயாணம் செய்பவர்கள் விஷக் காய்ச்சலாலும், பலவித நோய்களாலும் அவதிப்பட நேர்ந்ததால் கப்பல்களில் மருத்துவர்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. ஏதாவது ஒரு கப்பலில் மருத்துவராகச் சேர வேண்டும் என்ற இலட்சியத்தில் கலியமானுக்குச் சுலபமாகவே வெற்றி கிடைத்தது. அத்தொழிலில் கலியமானுக்கு உற்சாகமும் ஆர்வமும் ஏற்பட்டு விட்டது. அதனால் திருமணமான பின்பும்கூடத்தன் தொழிலைவிட்டுவிடாமல் தொடர்ந்து பல நாடுகளுக்கும் சென்று கொண்டிருந்தார். அக்காலத்தில் கலியமானுக்கு ஏற்பட்ட மெய்சிலிர்க்கச் செய்யும் விசித்திர விநோத அனுபவங்களை இங்கே கூறுவோம்.

ஒரு முறை கொற்கை துறைமுகத்திலிருந்து புறப்பட்ட கப்பல் ஒன்று தென்திசை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. அதில் டாக்டர் கலியமானும் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். பல மாதங்கள் பயணத்திற்குப் பின் திடீரென்று ஒரு நாள் அக்கப்பல் பெரும்புயலில் அகப்பட்டுக் கொண்டது. கரும்பூதம்போல் புயல் கப்பலைச் சூழ்ந்து கொண்டது. சூறா

வளிக் காற்று கப்பலைத் தூக்கிப் பந்தாடியது. கொந்தளித்த அலைகள் கப்பலை ஆட்டிப் படைத்தன. கேப்டன் எந்தத் திசையில் போவது என்று புரியாமல் தத்தளித்தான். காற்றடிக்கும் திசையெல்லாம் கப்பல் இழுத்துச் செல்லப்பட்டது. டமால் என்ற ஓசை. அடுத்த கணம் கப்பலில் இருந்தவர் யாருக்கும் நினைவிருக்கவில்லை. ஒரு பெரிய பாறையின் மீது மோதிக் கப்பல் சிதறிவிட்டது. பெரும்பாலான பிரயாணிகள் நீரில் மூழ்கி இறந்து போய் விட்டனர். ஆறு பேர்கள் மட்டுமே ஒரு சிறிய படகில் ஏறிக்கொண்டு உயிர் தப்பினர். புயல் அப்படகை சுமார் மூன்று மைல் தூரம் இழுத்துச் சென்றது. ஆனால் பாவம்! உயிர் தப்புவதற்கு அவர்கள் செய்த முயற்சியெல்லாம் வீணாயிற்று. திடீரென்று எழுந்த மலை போன்ற பெரிய அலை ஒன்று அப்படகை ஆகாயத்தில் தூக்கிச் சிறிது தூரம் கொண்டு போய் அப்படியே கடலில் அமிழ்த்தி முழ்கடித்து விட்டது.

அந்தப் படகில் இருந்த ஆறுபேர்களில் கலியமானும் ஒருவர். படகு முழ்கியவுடன் அவருக்குச் சுயநினைவு தப்பி விட்டது. மறுபடியும் நினைவு வந்தபோது தான் எதையோ பிடித்துக்கொண்டு மிதந்து கொண்டிருப்பதை உணர்ந்தார். சூரிய வெப்பம் திடீரென்று உறைத்தது. கடல் அமைதியாக இருந்தது. கலியமான் தம் உடலில் எஞ்சியிருந்த சக்தியைத் திரட்டிக்கொள்ள முயன்றார். மெதுவாக நீந்த முயன்றார். சுற்றும் முற்றும் பார்த்தபோது வெகுதூரத்தில் பெரிய மண் மேடு போன்ற ஒரு திட்டு தெரிந்தது. உடனே அதை நோக்கி நீந்தத் தொடங்கினார்.

அவர் நினைத்தது போலவே அது ஒரு சிறிய தீவு. சுற்றுமுற்றும் நோக்கினார். மனித நடமாட்டமே இல்லாத வனாந்திரமாகக் காணப்பட்டது. ஓய்வெடுத்துக் கொள்ள ஒரு சிறிய வீடோ குடிசையோ கூடக் காணப்படவில்லை. பசி வயிற்றைக் கிள்ளியது தாகம் நாக்கை வரட்டியது. குடிப்பதற்கு தண்ணீர் இல்லை. பசி மயக்கம். அத்துடன் ஒரு நாள் முழுவதும் நீந்திவந்த களைப்பு. நடக்க முடியாத அசதியால் கண்ணை

மூடிக்கொண்டு அப்படியே படுத்தவர் தன்னை மறந்து தூங்கி விட்டார். அடித்துப் போட்டால் கூடத் தெரியாது என்று சொல்கிறபடி ஆழ்ந்த தூக்கத்தில் லயித்து விட்டார்.

மறு நாட் காலை சூரியன் சுரீர் என்று குத்தத் தொடங்கிய பின் தான் கலியமானுக்கு நினைவு வந்தது. பசி தாங்க முடிய வில்லை. தீவுக்குள் சென்று யாரிடமேனும் உதவி கேட்கலாம் என்றெண்ணி எழுந்திருக்க முயன்ருர். ஆனுல் அவரால் அசையவே முடியவில்லை. அவருடைய கைகால்கள் எல்லாம் பூமியுடன் சேர்த்துக் கட்டப்பட்டிருந்தன. தலையைத் தூக்கிக் கூடப் பார்க்க முடியாமல் திணறினுர். தன்னைச் சுற்றிலும் ஆட்கள் நின்று கீச்சுக் கீச்சென்று பேசும் குரல்களை மட்டும் அவரால் கேட்க முடிந்தது. ஒலிகள் கத்துவதைப்போல் இருந் தது. ஆயினும் அவர்கள் மனிதர்கள் தான். அவர்கள் எதையோ தீவிரமாக விவாதித்துக் கொண்டிருக்கிருர்கள் என்பதை கலியமானுல் புரிந்து கொள்ள முடிந்தது. அவர்களைப் பார்ப்ப தற்காக விழிகளைச்சுழற்றினுர் ஆனுல் யாரையுமே பார்க்க முடியவில்லை.

தான் எங்கே இருக்கிருேம். நேற்று இரவு என்ன நடந் தது என்று புரியாமல் கலியமான் குழம்பித் தவித்துக் கொண் டிருக்கையில் கால்மீது ஏதோ அசைவதைப் போன்றிருந்தது. ஏதோ உயிருள்ள ஒன்று தான் தன் மீது ஏறி வந்து கொண்டி ருக்கிறது என்பதை உணர்ந்து கொண்ட கலியமான் ஆவலு டன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அது அருகில் வந்த போது கலியமான் திகைத்துப்போய் விட்டார். ஏனென்ருல் பெரிய வண்டுபோல் அவர்மேல் நடந்து கொண்டிருந்தது ஒரு மனிதன் தான். ஆனுல் அவன் சுமார் ஆறங்குல உயரம் தான் இருந்தான். போர் வீரன் போல் உடையணிந்து கொண்டிருந்தான். இடுப்பில் கத்தி. கேடயம், கையில் வில் அம்பு எல்லாம் இருந்தன. கலியமான் மார்பின்மேல் ராணுவ நடை போட்டபடி கம்பீரமாக அவன் வந்து கொண்டிருந் தான்.

ஆறங்குல உயரம்!

ஆனாலும் அவன் மனிதன் தான்!

கலியமானால் தன் கண்களையே நம்ப முடியவில்லை!

தான் காண்பது கனவா அல்லது நினைவா என்பது அவருக்கே புரியவில்லை. அந்த விரல் மனிதனுக்குப் பின்னால் சுமார் நாற்பது ஐம்பது பேர் கையில் வில், அம்புகளுடன் போர் வீரர்களைப்போல் அணிவகுத்து ராணுவ நடை நடந்து வந்து கொண்டிருந்தனர்.

அவர்களைப் பார்த்து வியப்படைந்த கலியமான் தன்னையும் அறியாமல் 'ஆ' என்று கூவிவிட்டார். அவருடைய கூச்சலைக் கேட்டவுடனே அவர்மேல் நடந்து வந்து கொண்டிருந்த விரல் மனிதர்கள் பீதியடைந்து மிரண்டு ஓடிவிட்டனர். சிலர் அவர் மார்மேலிருந்து தாவிக் குதித்துத் தப்பினர். அவ்வாறு குதித்தவர்கள் தப்பித்தோம் பிழைத்தோம் என்று தலைதெறிக்க ஓடினர்.

சிறிது நேரம் ஒன்றும் நடக்கவில்லை. அவர்கள் தங்களுக்குள் பலமாக விவாதிப்பதும். ஒருவன் ஆவேசமாக ஏதோ பிரசங்கம் செய்வதும் கேட்டது. பிறகு மறுபடியும் விரல் மனிதர்கள் கூட்டமாக அவர்மேல் ஏறிவரத் தொடங்கினர்.

முன்னால் வந்த ஒருவன் கலியமானின் முகத்தைப் பார்த்துவிட்டுப் பின்னால் வந்த வீரர்களிடம் ஏதோ சொன்னான். அவர்கள் மொழி கலியமானுக்குப் புரியவில்லை. அதனால் பயமே அதிகரித்தது. மெதுவாக, கொஞ்சம் கொஞ்சமாகத் தன் கைகளை விடுவித்துக் கொண்டு தலைமுடிக் கற்றைகளை இழுத்துக் கட்டியிருந்த கயிறுகளை ஒவ்வொன்றாகப் பிடுங்கி விட்டார். அவர்கள் எல்லோரையும் தன் கையால் பிடிக்க விரும்பிக் கையை நீட்டினார். ஆனால் அதற்குள் அவர்கள்சரமாரியாக அம்புகளை எய்தனர். கலியமானது உடலில் ஊசிகள் துளைப்பதுபோல் அம்புகள் துளைத்தன. உடலில் குத்திக் கொண்டு அப்படியே நின்றன. மேலும் பலர் அவரது

முகத்தின்மேல் விழுந்து பிளுண்டினர். வலி பொறுக்க முடியாத நிலையில் அவர்களுடன் சண்டை போட்டு தன்னைக் காப்பாற்றிக் கொள்ளலாமா என்று கலியமான் நினைத்தார். ஆனால் மறுகணமே தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானால் அவர்களை எதிர்த்துப் போரிடாமல் இருப்பதே நல்லது என்று நினைத்தவராக அவர்களால் ஏற்பட்ட எல்லாத் துன்பங்களையும் பொறுத்துக் கொண்டு அசையாமல் படுத்திருந்தார்.

கலியமான் மௌனமாக ஒன்றும் செய்யாமல் இருப்பதைப் பார்த்ததும் விரல் மனிதர்களும் அம்பெய்வதை நிறுத்தி விட்டனர். ஆனால் விரல் மனிதர்கள் மென்மேலும் கூட்டங் கூட்டமாக அவரை நெருங்கி வந்து கொண்டிருந்தனர். அவர்கள் என்ன செய்யப் போகிறார்கள்? கலியமான் மெதுவாக தலையைத் திருப்பிப் பார்த்தார். அவருக்கு வலது பக்கத்தில் சுமார் பதினெட்டு அங்குல உயரத்தில் ஒரு மேடை அமைக்கப்பட்டுக் கொண்டிருந்தது. விரல் மனிதர்கள் சுறுசுறுப்பாக ஓடி ஓடி வேலை செய்து கொண்டிருந்தனர். அவர்களுடைய திறமையையும், சுறுசுறுப்பையும் கண்டு கலியமான் வியந்தார். அவர்கள் விரல் அளவேயிருந்த போதிலும் சாதாரண மனிதர்களைப் போலவே எல்லாக் காரியங்களையும் திறமையுடன் செய்து கொண்டிருந்தார்கள்.

மேடை அமைக்கப்பட்டதும் அதிகாரியைப் போன்று மிடுக்கான உடை அணிந்திருந்த ஒரு மனிதன் அதன்மேல் ஏறி வந்தான். அவனைத் தொடர்ந்து இரண்டு வீரர்கள் வந்தனர். அந்த அதிகாரி கலியமானின் காதுக்கருகில் குனிந்து ஏதோ கூறினான். கலியமானுக்கு அவர்கள் மொழி தெரியாததால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் அந்த அதிகாரி தன் பேச்சினிடையே 'இலவநத்தம் இலவநத்தம்' என்று அடிக்கடி கூறியதால் அது அந்நாட்டின் பெயராக இருக்குமோ என்ற சந்தேகம் உண்டாயிற்று. அவர்களுடன் பேசிப் பழகிக் கொண்ட பிறகுதான், தான் நினைத்தது சரி என்பதை கலியமான் தெரிந்து கொண்டார்.

அவ்வதிகாரி மிகவும் அன்புடன் பேசினன். அதன் பின்னர் கலியமானின் பயம் கொஞ்சம் குறைந்தது. கலியமானுக்கு மிகவும்பசித்ததால் சைகை காட்டித்தனக்கு உணவு வேண்டும் என்று கேட்டார். உடனே அதிகாரி தன் அருகில் நின்றிருந்த ஏவலாட்களிடம் ஏதோ கட்டளையிட்டான். மறு விநாடி கலியமானைச் சுற்றி ஏணிகள் போடப்பட்டன. பல நூற்றுக்கணக்கான வீரர்கள் கையில் உணவுத் தட்டுகளுடன் மேலே ஏறி வந்தனர். சிலர் உணவுத் தட்டுக்களை அவர் கையில் கவிழ்த்தனர். சிலர் நேராக வாயிலேயே கவிழ்த்தனர். சுவையாகவே உணவு இருந்த போதிலும் மிகமிகக் கொஞ்சமாக இருந்ததால் பல நூறு தட்டுகள் சேர்ந்த பிறகு தான் ஒரு வாய் நிறைந்தது. இப்படியாகக் கொஞ்சம் சாப்பிட்ட பின் அவர்களே பீப்பாய் பீப்பாயாக தண்ணீரைக் கொண்டு வந்து ஊற்றினர்கள். அவர் சாப்பிட்டதும் குடித்ததும் விரல் மனிதர்களுக்கு மிகமிக ஆச்சரியமாக இருந்தது. அவர்கள் ஆச்சரியத்தால் கூச்சல் போட்டார்கள். குதித்துக் கூத்தாடினர்கள். காணக்கிடைக்காத அந்த விந்தையைக் காண்பதற்காக மேலும் மேலும் மனிதர்கள் திரள் திரளாக வந்து கொண்டிருந்தார்கள்.

கலியமானுக்கு பழைய தெம்பு வந்துவிட்டது. அவர்களோடு சண்டையிடலாம். ஆனல் அவர்கள் போட்ட சோற்றைத் தின்றுவிட்டதால் தான் இனி அவர்களோடு சண்டை போடுவது முறையாகாது. இனித் தான் அவர்களுக்கு விருந்தினனே அன்றி விரோதி அல்ல என்று மனதை உறுதி செய்து கொண்டார்.

கலியமான் அமைதியாக இருந்ததைப் பார்த்துவிட்டு விரல் மனிதர்கள் தைரியமடைந்து அவருக்கு மிகச் சமீபமாக வந்து கூடி விட்டனர். அவர்களுக்கு ஒரே ஆச்சரியம்! குதூகலம்! சந்தோஷமாக அவர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டு சிரித்தனர். சிறிது நேரத்திற்குப் பிறகு வேரெரு அதிகாரி கலியமான்மேல் ஏறிவந்து அவர் முகத்திற்கு எதிரே மார்பின் மீது நின்று கொண்டு ஒரு துண்டுக் காகிதத்தைக்

காண்பித்தார். அந்தக் காகிதம் நம் விரல் நகத்தைவிட மிகச் சிறியதாக இருந்தது. அதன்மேல் ஏதோ எழுதப்பட்டு முத்திரை வைக்கப்பட்டிருந்தது. அது மிகவும் முக்கியமான கடிதம் என்பது மட்டுமே கலியமானுக்குப் புரிந்தது.

அது இலவநத்த மன்னனின் ஆணை! கலியமானை தலைநகரத்திற்குக் கொண்டு வரும்படி மன்னர் கட்டளை போட்டிருந்தார். கலியமானுக்கு அதில் என்ன எழுதியிருக்கிறது என்பது புரியவில்லை. அதைப்பற்றி அவர் கவலைப்படவும் இல்லை. தான் உயிரோடிருப்பதே பெரிய விஷயம் என்று நினைத்தார். அதே சமயம் கலியமானுக்குத் தூக்கம் கண்ணைச் சுழற்றியது. அதற்குக் காரணம் அவர் குடித்த நீரில் விரல் மனிதர்கள் மயக்க மருந்தைக் கலந்திருந்ததுதான்! விரல் மனிதர்கள் அவரைப் பிணைத்திருந்த கயிறுகளைத் தளர்த்தி, அவர்மேல் அம்பு பட்ட புண்களின் மீது மருந்து தடவினர். கலியமான் அயர்ந்து தூங்கிவிட்டார்.

## 2

சுமார் ஐநூறு தச்சர்கள் ஒன்று சேர்ந்து கலியமானைத் தலைநகருக்குத் தூக்கிச் செல்வதற்காக ஒரு பெரிய வண்டி செய்தனர். பத்து யானைகளைச் சுமந்து செல்ல வேண்டுமானால் எவ்வளவு பெரிய வண்டி செய்ய வேண்டியிருக்கும்? மிகவும் கடினமான காரியமல்லவா? அதைப் போலத்தான் கலியமானைத் தூக்கிச் செல்ல வண்டி செய்வது அவர்களுக்கு மிகக் கடினமான காரியமாக இருந்தது. ஆயினும் அவர்கள் இரவு பகல் பார்க்காமல் சுறுசுறுப்பாக வேலை செய்ததால் கலியமான் தூங்கி விழிப்பதற்குள் வண்டியைத் தயார் செய்து விட்டனர். அவ்வளவு பெரிய வண்டியை இலவநத்த மக்கள் அதுவரை பார்த்ததில்லை. அது மிகப் பிரமாண்டமானதாக அவர்களுக்குத் தோன்றியது, நான்கு அடி அகலமும், ஏழு அடி நீளமும் கொண்ட அவ்வண்டிக்கு இருபது சக்கரங்கள் பொருத்தப்பட்டிருந்தன. அதன் மேல் உறுதியான பலகை

கள் போடப்பட்டன. அதன் முன்பக்கம் நீளமான நுகத்தடி இணைக்கப்பட்டிருந்தது.

வண்டி தயாரானவுடன் அதை கலியமானுக்குப் பக்கத்தில் கொண்டு வந்து நிறுத்தினர். கலியமான் விழிக்கவேயில்லை. மயக்க மருந்து அவரைச் சுய நினைவற்ற நிலையில்



வைத்திருந்தது. அவரை வண்டியிலேற்றுவதற்காக அந்நாடு முழுவதுமிருந்து ஆயிரக்கணக்கான பலசாலிகள் தருவிக்கப்பட்டிருந்தனர். அவர்கள் ஒன்று கூடி கலியமானைப் பிடித்து உருட்டித் தள்ளி வண்டியில் ஏற்றிக் கயிற்றால் கட்டினர். வண்டியை இழுக்க நூற்றுக்கணக்கான யானைகளும், ஆயிரக்

கணக்கான குதிரைகளும் பூட்டப்பட்டன. அவை எல்லாம் நான்கு அல்லது ஐந்து அங்குலம் உயரமே இருந்தன, அவை மிகக் கஷ்டப்பட்டு வண்டியை இழுத்துச் சென்றன. முன்னும், பின்னும், இரு பக்கங்களிலும் ஆயிரக்கணக்கான வீரர்கள் ஈட்டிகள், வில், அம்புகள், கத்திகளை ஏந்தியபடி அணி வகுத்து நடந்தனர். அப்படிப்பட்ட பிரமாண்டமான ஒரு ஊர்வலத்தை இலவநத்த மக்கள் கற்பனை செய்துகூடப் பார்த்திருக்க மாட்டார்கள். வண்டி பல கிராமங்களையும் நகரங்களையும் கடந்து சென்று கொண்டிருந்தது. வண்டி வருவதற்கு முன்பே அந்தந்த கிராம மக்கள் திரள் திரளாகக் கூடியிருந்தனர். அத்தகைய பெரிய வண்டியையும், அதில் கிடக்கும் பூதாகரமான மனிதனையும் கண்டு அதிசயித்தவர்களாக வண்டியின் பின்னாலேயே நடந்தனர். கூட்டம் மேலும் மேலும் அதிகமாகிக் கொண்டே இருந்தது, கூச்சலும் அதிகரித்தது. ஆயினும் கலியமான் விழிக்கவே இல்லை.

சில மனிதர்கள் கலியமான் தூங்கும்போது அவருடைய முகத்தைப் பார்ப்பதற்காக வண்டியின்மேல் தொத்தி ஏறினர். அவர்களுள் தைரியசாலியான ஒருவன் கலியமானுடைய முகத்தின்மேல் ஏறி மூக்கருகில் சென்றான். கலியமான் மூச்சு விட்டவுடன் தடாலென்று கீழே விழுந்தான். மறுபடியும் மூச்சை இழுத்தபோது அவனும் சேர்ந்து இழுக்கப்பட்டான். இவ்வாறு சிறிது நேரம் விழுந்தும் எழுந்தும் அல்லாடிக் கொண்டிருந்தான். அதைப் பார்த்த மற்றவர்கள் சிரித்தனர். உடனே அவனுக்குக் கோபம் வந்துவிட்டது. தன் கையிலிருந்த ஈட்டியால் கலியமானுடைய மூக்கினுள் குத்திவிட்டான். உடனே கலியமான் தும்மிக் கொண்டே கண் விழித்துவிட்டார். அதுவரை தங்களை தைரியசாலிகளாக நினைத்துக் கொண்டிருந்தவர்கள் அவர் தும்மிய சத்தத்தைக் கேட்டவுடன் அடித்துப் புரண்டு கொண்டு வண்டியைவிட்டுவிட்டுக் குதித்து ஆளுக்கொரு திக்கில் ஓட்டம் பிடித்தனர். இப்படிப் பல வேடிக்கைகள் நடைபெற்றன.

இரண்டு நாட்களாக வண்டி தலைநகரை நோக்கிச் சென்று கொண்டே இருந்தது. அன்றிரவு ஓய்வு எடுத்துக்

கொள்ள விரும்பிய சேனைத் தலைவன் ஒரு இடத்தில் வண்டியை நிறுத்தச் சொன்னான். வண்டியிலிருந்து குதிரைகளை அவிழ்த்துவிட்டு இளைப்பாறினர். கலியமான் தப்பிச் சென்று விடாமலிருக்க வண்டியின் இருபுறமும் போர் வீரர்கள் காவலுக்கு நின்று கொண்டிருந்தனர். ஆனால் கலியமான் தப்பிச் செல்ல விரும்பவில்லை. அவர்களிடமிருந்து தப்பித்துக் கொண்டால்கூட எங்கே போவது? முன்பின் தெரியாத இடத்தில் மாட்டிக் கொண்டாயிற்று. இனி நடப்பது நடக்கட்டும் என்று நினைத்த கலியமான் ஒன்றும் செய்யவில்லை. வண்டி தலைநகரைச் சென்றடையும் வரையில் அசையாமல் படுத்துக் கிடந்தார்.

"மலை போன்ற மனிதன் ஒருவனைக் கொண்டு வருகிறார்கள் என்ற செய்தி நகரில் பரவிவிட்டது. ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாகப் பேசினார்கள். அவனைப் பார்க்க வேண்டும் என்ற ஆவலால் அந்நகர மக்கள் கூட்டம் கூட்டமாகத் திரண்டு ஓடிவந்தனர். முதலில் அரசனும், அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் சென்றார்கள். அதிகாரிகளும், காவலர்களும் பின் தொடர்ந்தார்கள். பிரபுக்களும், சாதாரண ஜனங்களும் அவர்களைப் பின் தொடர்ந்து சென்றார்கள். கலியமான் எழுந்திருக்க முடியாதபடி வண்டியோடு சேர்த்துக் கட்டப்பட்டிருந்தபோதிலும், அரசர் அருகில் செல்லக் கூடாதென்று மந்திரிகள் தடுத்து விட்டார்கள். அரச குடும்பத்தவர்கள் தூரத்திலேயே இருந்து வேடிக்கை பார்த்தார்கள். மற்றவர்களில் தைரியசாலிகள் நெருங்கிச் சென்று கலியமானைத் தொட்டுப் பார்த்து ஆனந்தம் அடைந்தனர். இலவநத்தத்தின் சரித்திரத்திலேயே அப்படிப்பட்ட ஒரு அற்புத நிகழ்ச்சி நடைபெற்றதில்லை என்று எல்லோரும் ஆச்சரியத்துடன் பேசிக் கொண்டனர்.

அவ்வளவு பெரிய மனிதனை எங்கே தங்க வைப்பது? அரசரும் மந்திரிகளும் அதைப்பற்றி விவாதித்து ஒரு முடிவுக்கு வந்தார்கள். அதன் பின் கலியமான் அங்கு கொண்டு வரப்பட்டார்.

அந்நாட்டிலேயே மிகப் பெரிய கட்டடம் அதுதான். ஒருவேளை அது முற்காலத்தில் கட்டப்பட்ட கோயிலாக இருக்கலாம். அந்தக் கட்டிடத்திற்குள் கலியமான் கொண்டு செல்லப்பட்டார். அதன் சுவர்கள் கற்பாறைகளால் கட்டப் பட்டிருந்தன. பெரிய பெரிய தூண்கள் அதன் தளத்தைத் தாங்கி நின்றன. அதன் சுவர்களில் இரண்டு ஜன்னல்கள் மட்டுமே இருந்தன. ஆயினும் கலியமானுக்கு அது பொம்மை வீடு மாதிரியே காட்சியளித்தது.

உள்ளே கொண்டு சேர்க்கப்பட்டவுடன் காவலர்கள் கலியமானுடைய கால்களிரண்டையும் தொண்ணூறு சங்கிலி களால் கட்டினர். கதவு நன்ருக இழுத்து மூடப்பட்டது. அதன் பின்னர் தான் கலியமானை வண்டியுடன் சேர்த்துப் பிணைக்கப்பட்டிருந்த சங்கிலிக்கயிறுகளை அவிழ்த்துவிட்டனர். கலியமானை அறைக்குள் அடைத்தவுடன் தாங்கள் ஏதோ பெரிய சாதனையைச் செய்துவிட்டது போலவும், ஆபத்தி லிருந்து தப்பிவிட்டது போலவும் விரல் மனிதர்கள் கைகொட்டி ஆரவாரம் செய்தனர். அதன் பிறகு தான் கலிய மான் எழுந்து நின்று சுற்று முற்றும் பார்க்க முடிந்தது.

அத்தகைய காட்சியை கலியமான் கற்பனை செய்து கூடப் பார்த்ததில்லை. அந்நகரம் ஒரு தோட்டத்தைப் போல காட்சியளித்தது. எங்கு பார்த்தாலும் பச்சைப் பசேலென்ற புல்வெளிகளும், காய்கறிச் செடிகளும், மலர்ச்சோலைகளு மாகக் காட்சியளித்தன. வயல்களுக்கும், தோட்டங்களுக்கும் நடுவே வரப்புகளைப் போன்று அந்நகரின் சாலைகள் நீண்டு கிடந்தன. அந்நாட்டில் மிகப்பெரிய மரங்கள் என்று சொல்லப் படக் கூடியவை சுமார் ஏழடி உயரமே இருந்தன. செடி கொடிகள், வயல் வரப்புகள் எல்லாம் அதற்குத் தக்கபடி குட்டையாகவும் குறுகலாகவும் அமைந்திருந்தன. சுருங்கச் சொன்னல் அந்நகரின் தோற்றம் ஒரு வரைபடத்தைப் போலவே காட்சியளித்தது. கலியமானைச் சுற்றிலும் ஆயிரக் கணக்கான விரல் மனிதர்கள் குழுமியிருந்தனர். அவர்கள் ஆறு அங்குல உயரமே இருந்தனர். அவர்களைவிட மிகவும்

சிறியனவாக விலங்குகள் இருந்தன. குதிரைகளும், பசுக் களும் நான்கு அங்குல உயரமும், செம்மறியாடுகள் ஒரு அங்குல உயரமும் இருந்தன. கோழிகள், வாத்துக்கள், மற்ற பறவைகள் எல்லாம் சிறு பூச்சிகளைப் போல் இருந்தன.

அரசரும், அவரது குடும்பத்தவர்களும் அரண்மனை மாடத் தில் நின்று கலியமானைப் பார்த்துக் கொண்டிருந்தனர். சிறிது நேரம் கழித்து அரண்மனையைவிட்டு வெளியே வந்த அரசர் குதிரையின் மீது ஏறிக்கொண்டு கலியமானை நோக்கி வந்தார். ஆனால் கலியமானுடைய உருவத்தைப் பார்த்ததும் குதிரை மிரண்டு போய்ப் பின்வாங்கத் துவங்கியது. உடனே அரசர் குதிரையைவிட்டுக் கீழே இறங்கி வந்து, கலியமானைச் சுற்றி வந்து நோட்டமிட்டார். கலியமானும் ஆவலுடன் அரசரைப் பார்த்தார். மற்றவர்களைவிட அரசர் அரை அங்குல உயரம் அதிகமாக இருந்தார். வலிமையுடையவராகவும், இரக்க சுபாவம் உடையவராகவும் தோற்றமளித்தார். அரசருக்குரிய மிடுக்குடன் அவர் நடந்து வந்தார்.

அரசருடைய உடை ஆடம்பரமின்றி சாதாரணமானதாக இருந்தது. அவர் தலையில் அணிந்திருந்த கிரீடம் நவரத்தினங் களாலும், மயிலிறகுகளாலும் அழகு செய்யப்பெற்று பிரகாசித் தது. அவர் இடையில் சொருகியிருந்த வாள் மூன்று அங்குல நீளமெ இருந்தது. அதன் கைப்பிடி பொன், நவரத்தினக் கற்களால் அணி செய்யப் பெற்றிருந்தது.

சிறிது சிறிதாக தைரியம் வரப்பெற்ற அரசர் கலியமானை நெருங்கி வந்து பல கேள்விகள் கேட்டார். கலியமானும் அரசருக்குப் பதில் சொன்னார். ஆனால் இருவருக்குமே மொழி புரியவில்லை. அரசவைப் பிரதானிகளும், வழக்கறிஞர்களும் கலியமானுடன் பேச முயன்றனர். கலியமானும் தனக்குத் தெரிந்த மொழிகளில் எல்லாம் தன்னைப்பற்றி அறிமுகம் செய்து கொள்ள முயன்றார். ஆனால் அவர் பேசியதில் ஒரு வார்த்தைகூட அவர்களுக்குப் புரியவில்லை. அவர்கள் பேசிய மொழியும் கலியமானுக்குப் புரியவில்லை.

வெகுநேரம் கழித்து அரசர் தன் அரண்மனைக்குத் திரும்பி விட்டார். சூரியன் மறையத் தொடங்கியது. இலவநத்த மக்கள் அனைவரும் தத்தம் வீடுகளுக்குத் திரும்பி விட்டனர். கலியமானைப் பாதுகாக்க படைவீரர்கள் நிறுத்தப்பட்டிருந்தனர். கலியமான் வலிமையான சங்கிலிகளால் பிணைக்கப்பட்டிருந்தார். எனவே அவரால் ஒன்றும் செய்ய முடியாது என்றெண்ணிய வீரர்களில் சிலர் குறும்புத்தனமாக அவர்மேல் அம்புகளை எய்து துன்புறுத்த நினைத்தார்கள். ஆனால் அவர்களுடைய படைத்தளபதி கலியமானைக் காப்பாற்றியதுடன், ஆறு வீரர்களைப் பிடித்துக் கயிற்றால் கட்டி கலியமானிடம் கொடுத்துவிட்டார். அதைப் பார்த்ததும் கூட்டத்தவர்கள் பயந்துபோய் நடுங்கினர். கலியமான் அந்த ஆறுபேரில் ஐவரைத் தன் கோட்டுப் பையில் போட்டுக் கொண்டார். ஆறாவதாக இருந்த ஒருவனைத் தன் கையில் வைத்துக் கொண்டு விழுங்கிவிடுவதைப் போல முறைத்துப் பார்த்தார். பிறகு தன் சட்டைப்பையிலிருந்த கத்தியை எடுத்தார். அதைப் பார்த்த அவ்விரல் மனிதன் அலறத் தொடங்கி விட்டான், படைத்தளபதியே அவனுக்காக இரக்கம் கொண்டார். ஆனால் கலியமான் தன் கத்தியை எடுத்து அவ்விரல் மனிதனைச் சுற்றிக் கட்டியிருந்த கயிறுகளை அவிழ்த்து விட்டார். பிறகு மற்றவர்களையும் அவ்வாறே விடுவித்தார். அதைப் பார்த்ததும் படை வீரர்களும் மற்ற ஜனங்களும் கலியமானைப் பாராட்டிப் புகழத் தொடங்கினர். அவருடைய நற்குணத்தைக் கண்டு வியந்தனர். அதன் பிறகு ஒருவரும் அவர் மீது அம்பெய்து துன்புறுத்தவோ, தொல்லை கொடுக்கவோ விரும்பவில்லை.

## 3

தலைநகரில் மலைபோன்ற ஒரு பூத மனிதன் சிலை வைக்கப்பட்டிருக்கிறான் என்பதையறிந்த அந்நாட்டு மக்கள் நெடுந்தொலைவிற்கப்பாலிருந்தெல்லாம் கூட்டம் கூட்டமாக அவரைப் பார்க்க வந்துகொண்டிருந்தார்கள். கிராம விவ

சாயிகள், நகரத் தொழிலாளர்கள், வியாபாரிகள் எல்லோரும் தத்தம் வேலைகளை ஒதுக்கிவிட்டு மலைபோன்ற மனிதனைப் பார்க்க வந்தனர். அதனால் நாட்டின் தொழில்கள் நலிந்தன. அதை அறிந்த மன்னன் கலியமானைப் பார்க்க இனி யாரும் வரக்கூடாது என்று கட்டளை பிறப்பித்து விட்டார். அதன் பின்னர் தான் கூட்டம் குறைந்தது.

அரசருக்கு கலியமானை என்ன செய்வது என்று புரிய வில்லை. அவருடைய மந்திரிகள் கலியமானை உயிரோடு வைத்திருந்தால் தங்களுக்கு ஆபத்து என்று கருதினர். சாது வாகக் காணப்படும் கலியமான் ஏதாதது வெறி வந்தால் தனது பலத்தால் நாட்டையே அழித்துவிடக் கூடும் என்று பயந்தனர். தவிர கலியமானுக்குச் சோறு போடுவது அவர் களுக்கு ஒரு பெரிய பிரச்னையாக இருந்தது. ஆயிரம்பேர் சாப் பிடக்கூடிய சாப்பாட்டை கலியமான் ஒருவனே சாப்பிட்ட தால் தங்கள் நாட்டில் உணவுப் பஞ்சம் வந்துவிடும் என்று மந்திரிகள் பயந்தனர். அதனால் அவர்கள் பட்டினி போட்டோ அல்லது விஷ அம்புகளை எய்தோ கொன்றுவிடு வதே நல்லது என்று யோசனை கூறினார்கள்.

ஆனால் அரசரோ கலியமானைக் கொல்ல விரும்பவில்லை. ஆறு வீரர்களை அவரிடம் பலியாகக் கொடுத்த போதிலும் கொல்லாமல் விடுவித்த கலியமானின் பெருந்தன்மையை அரசர் மிகவும் பாராட்டினார். கலியமானை உயிருடன் வைத் திருக்கவே விரும்பினார். தலைநகருக்கு அருகே உள்ள கிராமத் தவர்கள் தினசரி அறுபது மூட்டை அரிசியும், அதற்கேற்ற பருப்பு, நெய், காய்கறி, பால் முதலியனவும் கலியமானுக்கு உணவு சமைப்பதற்காகக் கொண்டு வந்து தர வேண்டும் என்றும் ஆணை பிறப்பித்தார். முன்னூறு சமையல்காரர்கள் உள்பட அறுநூறு வேலைக்காரர்களை நியமித்தார். கலிய மானுக்கு உடை தைப்பதற்காக முன்னூறு தையல்காரர்களை யும் அமர்த்தினார்.

கலியமானுக்குக் கோட்டு தைக்க அளவெடுப்பதற்காக முதலில் கலியமானை முழந்தாளிட்டு உட்கார வைத்தனர்.

அதன் பின்னர் ஏணி போட்டு கலியமானின் தோள் மீது ஏறி நாலூந்து தையல்காரர்கள் ஒரு நீண்ட கயிற்றை வைத்து அளவெடுத்தனர். இலவநத்தம் தீவிலேயே மூன்று அடி நீளமும், மூன்று அங்குல அகலமும் உள்ளது தான் மிகப் பெரிய துணி. கலியமானின் பெரிய உருவத்திற்கு உடை தைப்பதற்காகப் பல துணிகளை ஒன்ருகச் சேர்த்து ஒட்டுப் போட்டுத் தைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது.



கலியமானுக்குக் கொடுக்கப்பட்ட வீட்டிற்கு அருகி லேயே அவருடைய சமையல்காரர்கள் முன்னூறு பேரும் குடிசைகளில் வசித்தனர். கலியமான் சாப்பிடுவதற்காக சற்று உயரம் குறைவான மேஜை நாற்காலிகளைச் செய்து வைத்தனர். அவருக்குப் பரிமாறுவதற்காக முதலில் இருபது இருபத்தைந்து சமையல்காரர்கள் மேஜை மீது ஏறிக் கொள் வார்கள். மற்றவர்கள் கீழே நின்று கொள்வார்கள். உணவும் தண்ணீரும் மேஜைமேல் நிற்பவர்கள் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுப்பதைப் போன்று கயிறுகளின் உதவியால்

எடுத்துக் கலியமானுக்குப் பரிமாறுவார்கள். அவர்கள் பெரிய பெரிய தட்டுகளில் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு வந்து வைக்கும் உணவு கலியமானுக்கு ஒரு வாய்க்குக் கூடப் போதாது. எனவே ஐம்பது அறுபது தட்டு சாப்பாடு அவருக்குத் தேவையாக இருந்தது.

அதைக் கேள்விப்பட்ட மன்னன் ஒரு நாள் கலியமானைத் தன் குடும்பத்தினருடன் விருந்து சாப்பிடுவதற்காக அழைத்தார். அதன்படி அவர் அரசரின் அரண்மனைக்குச் சென்றார். அவருக்காக அமைக்கப்பட்டிருந்த மேஜையின் மேல் அரசரும், அரச குடும்பத்தவர்களும் நாற்காலிகளைப் போட்டுக் கொண்டு அமர்ந்தார்கள். கலியமான் சாப்பிடுவதைப் பார்த்து எல்லோரும் அளவிலா ஆனந்தம் அடைந்தனர். ஆனால் அந்நாட்டின் நிதிமந்திரி மட்டும் கவலையுடன் பார்த்துக் கொண்டிருந்தார். இப்படிச் சாப்பிடும் ஒரு மனிதனை நம் ராஜ்யத்தில் வைத்துக் கொண்டிருந்தால் அவனுக்கு எவ்வளவு செலவாகும். அவனுக்காக எப்படி உற்பத்தி செய்வது? என்றெல்லாம் கணக்குப் பார்த்துக் கொண்டிருந்தார். அதனால் கலியமான் மீது அவருக்கு வெறுப்பே ஏற்பட்டது.

இலவநத்த மொழியைக் கலியமானுக்குக் கற்பிப்பதற்காக ஆறு ஆசிரியர்கள் அமர்த்தப்பட்டனர். அந்தத் தீவிலேயே அவர்கள் தான் கல்வி கேள்விகளில் மிகவும் புகழ் பெற்றவர்கள். அவர்களுடைய உதவியால் கலியமான் வெகுவிரைவிலேயே இலவநத்த மொழியைப் பேசவும் எழுதவும் தெரிந்து கொண்டார். அரசரும் அவ்வப்போது வந்து கலியமானுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தார். கலியமான் ஒரு சமயம் அரசரிடம் வந்து தன்னைச் சங்கிலிகளால் கட்டிப் போடாமல் விடுவித்து சுதந்திரம் கொடுக்கும்படி வேண்டிக் கொண்டார்.

அரசருக்கு இரக்கம் உண்டாயிற்று. இலவநத்த மக்களுக்கு எவ்வித துன்பமும் செய்வதில்லை என்று உறுதி கொடுத்தால் அவரை விடுதலை செய்வதாகக் கூறினர். கலியமான் சரி

என்று ஒப்புக் கொண்டார். அரசர் சில அதிகாரிகளை அழைத்து கலியமானின் கோட்டுப் பைகளில் ஏதேனும் ஆயுதங்கள் இருக்கின்றனவா என்று சோதித்துப் பார்க்கச் சொன்னார். அதிகாரிகளைத் தூக்கிக் கலியமான் தன் கோட்டுப் பைகளுக்குள் விட்டார். அவர்கள் சோதனை செய்தார்கள். அவரிடமிருந்த துப்பாக்கியைப் பார்த்து அவர்கள் திடுக்கிட்டனர். அது என்ன என்பது அவர்களுக்குப் புரியவில்லை.

கலியமான் துப்பாக்கியை எடுத்து வானத்தை நோக்கி ஒரு முறை சுட்டார். வெடிசத்தத்தைக் கேட்டவுடன் தூரத்திலிருந்தவர்களே அலறியடித்துக் கொண்டு ஓடத் தொடங்கி விட்டனர். அருகிலிருந்தவர்கள் மயக்கமடைந்து கீழே வீழ்ந்தனர். அந்தக் குழப்பம் அடங்குவதற்கு நெடுநேரம் பிடித்தது. கடைசியாக அரசர் கலியமானுடைய வாளையும், துப்பாக்கியையும் எடுத்துக் கொண்டு மற்ற பொருட்களை அவரே வைத்துக் கொள்ளலாம் என்று சொல்லி விட்டார். அத்துடன் அவருக்கு முழு சுதந்திரமும் வழங்கப்பட்டது.

இலவநத்த மக்களின் அன்பையும், ஆதரவையும் பெறுவதற்காக கலியமான் மிகவும் பணிவுடன் நடந்து கொண்டார். சில சமயங்களில் தான் கீழே படுத்துக் கொண்டு தன் கைகளின் மேல் ஆறேழு பேரை நடனமாட அனுமதித்தார். அது அவர்களுக்கு உல்லாசயாக இருந்தது. தன் தலைமுடியில் சிறுவர், சிறுமியர்கள் ஓடி ஒளிந்து விளையாட இடம் கொடுத்தார். சில விளையாட்டுக்கள் கலியமானுக்கு அபூர்வமானவையாகத் தோன்றின. அவற்றில் ஒன்று கயிற்றின் மேல் நடனம் ஆடுவது. அது மிகவும் நன்றாக இருந்தது. இரு கம்பங்களுக்கு இடையே தரையிலிருந்து சுமார் ஐந்தடி உயரத்தில் நீளமான கயிறு கட்டப்பட்டிருக்கும். அதன் ஒரு முனையிலிருந்து மற்றொரு முனைக்கு கீழே விழுந்துவிடாமல் நடந்து செல்பவர் வெற்றிபெற்றவராகக் கருதப்படுவார். அரசாங்க உத்தியோகத்திற்கு வருபவர்கள் கூட இத்தகைய போட்டிகளில் கலந்து கொண்டு வெற்றி பெற்றால்தான் வேலைக்குச் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். உயரத் தாண்டுதல், நீளத்

தாண்டுதல், ஓட்டப் பந்தயம் போன்றவற்றில் கலந்து கொள்ள வேண்டும். சில சமயங்களில் இத்தகைய விளையாட்டுக்களால் பலர் உயிரிழக்கவும் நேர்ந்தது.

கலியமான் அரசரின் அன்பைப் பெறுவதற்காக ஒரு விளையாட்டுச் செய்து காண்பித்தார். ஒன்பது மரங்களின் உச்சியில் தன் கைக்குட்டையைப் பாய்போல் விரித்து அதன் நான்கு முனைகளையும் மரங்களுடன் கட்டிவிட்டார். ஒரு குறிப்பிட்ட அளவு குதிரைகளையும் படைவீரர்களையும் அதன் மீது ஏற்றிப் பயிற்சி பெறச் செய்தார். அரச குடும்பத்தவர்கள் அதைக் கண்டு பெரிதும் மகிழ்ந்தார்கள். ஒரு நாள் குதிரை கொடுத்த உதையில் கைக்குட்டையில் ஓட்டை விழுந்து விட்டதால் அந்த விளையாட்டு நிறுத்தப்பட்டது.

இவற்றையெல்லாம் பார்த்த அரசருக்கு கலியமான் மீது நல்லெண்ணம் உண்டாகியது. விரைவில் விடுதலை செய்துவிடலாம் என்று தீர்மானித்தார். முதலில் அரசருக்கும் கலியமானுக்கும் இடையே ஒரு ஒப்பந்தப் பத்திரம் கையெழுத்தாயிற்று. அரசரது அனுமதியின்றி அந்நாட்டை விட்டு வேறெங்கும் செல்வதில்லை என்று கலியமான் ஒப்புக்கொள்ள வேண்டும். இலவநத்த மக்களுக்கு எவ்வித இடையூறும் செய்யக் கூடாது. முன்னறிவிப்பில்லாமல் தலைநகருக்குள் பிரவேசிக்கக் கூடாது. பெரிய சாலைகளிலேயே செல்ல வேண்டும். வயல்வெளிகளில் படுத்துவிடக் கூடாது. மக்களுடைய அனுமதியின்றி அவர்களைக் கைகளில் எடுக்கக் கூடாது. இலவநத்தத் தீவின் தூரப் பகுதிகளுக்கு தகவல்கள் எடுத்துச் செல்ல வேண்டும். மாட மாளிகைகள் கட்டும் போது பெரிய கற்களைத் தூக்கிக் கொடுத்து தொழிலாளர்களுக்கு உதவி செய்ய வேண்டும். இந்த நிபந்தனைகளைக் கலியமான் ஏற்றுக் கொண்டார். பதிலுக்கு அரசர் கலியமானின் கட்டுக்களை அவிழ்த்து விடுதலை செய்தார். நாள்தோறும் இலவநத்த வாசிகள் இரண்டாயிரம் பேர் சாப்பிடக் கூடிய உணவு அவருக்குக் கொடுக்கப்பட்டது. நாளடை

வில் கலியமானை இலவநத்த மக்கள் அனைவரும் விரும்பத் தொடங்கி விட்டனர். அவரிடம் மிகுந்த அன்பு காட்டினர்.

இலவநத்தம் பொம்மை போன்ற வீடுகளுடைய நகரங்களும் வயல்வெளிகளும் உடைய அழகான நாடாக இருந்த போதிலும், அந்நாட்டிலும் அரசியல் பிணக்குகளும், பகை கலகங்களும் தீவிரமாக இருந்தன. சின்னஞ்சிறு பொம்மைகளைப் போன்ற அழகான அம்மக்கள் அரசியலில் தீவிரமாக இருந்தார்கள் என்பதோடு பகைவர் படையெடுத்து வரலாம் என்ற அபாயமும் இருந்தது. கலியமானுக்கு விடுதலை கிடைத்த பின் மக்களோடு தாராளமாகப் பழகி அவர்களில் சிலரைத் தம் நண்பர்களாகச் செய்து கொண்டதால் அவர்கள் மூலம் இவ்விஷயங்களைக் கேள்விப்பட்டார்.

அந்நாட்டில் பெருந்தலைகள், சிறு தலைகள் என்று இரண்டு அரசியல் கட்சிகள் இருந்தன. அவற்றிடையே கடுமையான பகையும் போராட்டங்களும் இருந்து வந்தன. அச்சமயத்தில் சிறு தலைகள் என்ற கட்சியைச் சேர்ந்தவர்களே ஆட்சியைக் கைப்பற்றியிருந்தனர். அரசரும் அவர்களை ஆதரித்ததோடு அவர்களைப்போல் சிறிய தலைப்பாகை கட்டிக் கொண்டு வெளிப்படையாகத் தம் ஆதரவைத் தெரிவித்து வந்தார். ஆனால் ஆட்சிக்கு வாரிசான இளவரசர் ஒரு பக்கம் தலைப்பாகையை உயரமாகவும் மறுபக்கம் தாழ்வாகவும் பழைய காலப் போலீஸ்காரன் தொப்பி மாதிரிக் கட்டிக் கொண்டிருந்ததால் சிறுதலைகள் கட்சியைச் சேர்ந்தவர்கள் கவலையடைந்திருந்தார்கள். இதனால் இள்வரசர் ஒரு பக்கம் சரிந்து சரிந்து நடக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. பெருந்தலைகளிடையே இளவரசருக்கு நண்பர்கள் இருக்கிறார்கள் என்று பயப்பட வேண்டிய அவசியமும் அரசாங்கத்திற்கு ஏற்பட்டது. அரசருக்குப் பின்னர் இளவரசர் முடிசூட்டிக் கொண்டதும் பெருந்தலைகளுக்கு முக்கியமான பதவிகளைக் கொடுத்துவிடுவாரோ என்ற பயமும் ஏற்பட்டது.

4

இந்த உள்நாட்டுக் குழப்பங்களைத்தவிர அயல் நாட்டார் படையெடுத்து வரும் அபாயமும் இருந்தது. இலவநத்தத் திற்கு அடுத்தாற்போல் பழவநத்தம் என்ற பெரிய தீவு ஒன்று இருந்தது. அதிலும் விரல் மனிதர்கள் தான் வாழ்ந்து வந்தனர். இலவநத்த மக்கள் இந்த இரண்டு தீவுகளைத் தவிர உலகத்தில் வேறு நாடுகளே கிடையாதென்று நினைத்திருந் தனர். எனினும் இந்த இருநாட்டு மக்களிடையே ஒற்றுமை ஏற்படவில்லை. மூன்று வருடங்களாக போர் நடைபெற்று வந்தது. பகைக்குக் காரணம் இன்று நேற்று ஏற்பட்டதல்ல. தற்போதைய அரசரின் பாட்டனார் காலத்திலேயே ஏற்பட்டு விட்டது. இலவநத்த வாசிகள் அக்காலத்தில் கோழி முட்டைகளை அதன் அகன்ற முனைப்பக்கம் உடைத்து உப யோகப்படுத்தி வருவது வழக்கமாக இருந்து வந்தது. அப் போது சிறுவனாக இருந்த தற்போதைய அரசரின் பாட்டனார் வழக்கம்போல் கோழி முட்டையை அதன் அகன்ற பாகத்தில் உடைக்கும்போது தன் கையை வெட்டிக் காயப்படுத்திக் கொண்டார். அதைப் பார்த்ததும் அவருடைய தந்தையான பேரரசருக்குக் கட்டுக்கடங்காத கோபம் வந்துவிட்டது. இனி யாரும் முட்டையை அதன் அகன்ற பாகத்தில் உடைக்கக் கூடாது. குறுகிய முனைப்பக்கம் தான் உடைக்க வேண்டும் என்று ஆணை பிறப்பித்து விட்டார். யாரேனும் தவறாக நடந் தால் கடுமையான தண்டனை கொடுக்கப்படும் என்றும் அறிவித்து விட்டார்.

அதைக் கேட்ட மக்கள் பெரும் அதிர்ச்சியுற்றனர். பெரும் பாலோர் கோபமடைந்து கலகம் செய்யத் தொடங்கினர். தங்கள் பரம்பரை வழக்கத்தை மாற்றிக்கொள்ள அவர்கள் விரும்பவில்லை. ஆனால் அரசரும் விட்டுக் கொடுக்கவில்லை. தமது ஆணையை எல்லோரும் கட்டாயம் கடைப்பிடிக்கவேண் டும் என்று வலியுறுத்தினார். அவருக்குப் பின் அரியணை

ஏறிய அரசர்களும் அதை வலியுறுத்தி வந்தனர். தற்போது அரசாட்சி செய்யும் அரசரும் அச்சட்டத்தைக் கண்டிப்பாகப் பின்பற்றினர். அதனல் உள் நாட்டில் ஏற்பட்ட பிளவு நீடித்து வந்தது. அச்சட்டம் தோன்றியதிலிருந்து ஆறேழு கலகங்கள் நடந்துவிட்டன. ஒரு அரசகுமாரர் கொல்லப் பட்டார். எத்தனையோ மக்கள் உயிரிழந்து விட்டனர். ஆயினும் அரசர் திருந்துவதாக இல்லை.

இந்த விஷயம் எப்படியோ பழவநத்தம் வாசிகளுக்குத் தெரிந்து விட்டது. உடனே அந்நாட்டு மன்னர் வெளிப்படையாகக் கலகக்காரர்களுக்கு ஆதரவு தெரிவித்து விட்டார். அதனல் இருநாடுகளுக்கும் இடையே பகை ஏற்பட்டு போர் மூண்டு விட்டது. பழவநத்தம் இலவநத்தத்தைவிட படை வலிமை மிக்கது. அதன் கடற்படை பிரமாண்டமானது. எந் நேரமும் அவர்கள் படையெடுத்து வந்து விடலாம் என்ற பயம் இலவநத்த மக்களுக்கு இருந்து கொண்டே இருந்தது. கலியமான் இலவநத்தத்திற்கு வந்து சேர்ந்த நேரத்தில் இருந்த சூழ்நிலை இது.

அரசர் கலியமானை உயிரோடு சிறையில் வைத்திருந்தார். உள்நோக்கம் எதிரிகள் படையெடுத்து வந்தால் கலியமானை உபயோகப்படுத்திக் கொள்ளலாம் என்பது தான். கலியமானின் பெரிய உருவத்தையும், வலிமையையும் உணர்ந்த அரசர் அவர் எப்படியும் பகைவரை அழித்துவிடுவார் என்று நம்பினர். அதை அறிந்து கொண்டதும் கலியமான் இலவநத்தர் தீவிற்காகத் தன் உயிரையே தியாகம் செய்யத் தயாராக இருப்பதாகவும், பகைவர்களை எதிர்த்துப் போரிடத் தயார் என்றும் அரசருக்குத் தெரிவித்தார். அரசர் அதைக் கேட்டுப் பெரிதும் மகிழ்ந்தார்.

அதன் பிறகு இலவநத்த மக்களை பழவநத்தப் பகைவர்களிடமிருந்து எப்படிக் காப்பாற்றுவது என்பதைப்பற்றிக் கலியமான் யோசிக்கலானர்.

இலவநத்தத்திற்கு வடகிழக்கில் சிறிது தொலைவில் பழவநத்தம் தீவு அமைந்திருந்தது. கடல் ஆழம் சுமார் ஆறு அடி

தான் இருக்கும். இலவநத்தம் கடற்கரைக்கு அருகிலிருந்த குன்றின் மீது ஏறிக் கலியமான்கடலைப்பார்த்தார். பழவநத்தத் தீவின் கடற்கரையில் நூறுக்கும் மேற்பட்ட போர்க்கப்பல்கள் தயாராக நின்று கொண்டிருந்தன, அவை குழந்தைகள் வைத்து விளையாடும் சிறிய சிறிய பொம்மைப் படகுகளைப் போலவே காட்சியளித்தன. அவற்றிற்குப் பக்கத்தில் நூற்றுக்கணக்கான சிறிய கப்பல்களும் தயாராக இருந்தன, இலவநத்தத் தீவின் கடற்கரையில் பத்துப் பனிரெண்டு போர்க்கப்பல்கள் தான் இருந்தன. பழவநத்தத் தீவின் கடற்படை வீரர்கள் போருக்குத் தயாராக இருந்தனர். இலவநத்தத்தைப் பாதுகாக்க வேண்டுமென்றால் தாம் உடனடியாகக் காரியத்தில் இறங்கிச் செயல்பட வேண்டும் என்பது கலியமானுக்குப் புரிந்தது.

உடனே கலியமான் குன்றிலிருந்து இறங்கித் தன் வீட்டிற்குச் சென்றார். ஒரு நீண்ட இரும்புக் கம்பியை எடுத்து சுமார் நூறு கொக்கிகள் தயாரித்துக் கொண்டார். ஒரு பெரிய கயிற்றையும் எடுத்துக் கொண்டு கடற்கரையை நோக்கிச் சென்றார். கடலில் குதித்து நீந்திப் பழவநத்தத் தீவின் கடற்கரையை அடைந்தார். அவர் கடலில் நீந்தி வருவதை யாருமே கவனிக்கவில்லை. பழவநத்தம் கப்பல்களுக்கு நடுவில் கலியமான் எழுந்து நின்றபோது தான் கடற்படை வீரர்கள் அவரைப் பார்த்தனர். உடனே பயந்து போய் அலறியடித்துக் கொண்டு கடலில் குதித்து நீந்தி ஓடத் தொடங்கி விட்டனர். அவர்களைத் துன்புறுத்தக் கூடாது என்று தீர்மானித்திருந்ததால் கலியமான் அவர்களைப் பிடிக்க முயற்சி செய்யவில்லை. தம் காரியத்திலேயே கண்ணாக அங்கு நிறுத்தப்பட்டிருந்த போர்க் கப்பல்களில் தான் தயாராகக் கொண்டு வந்திருந்த கொக்கிகளை மாட்டிக் கயிற்றில் பிணைத்துக் கொண்டார்.

கலியமான் அதைச் செய்து முடிப்பதற்குள் பழவ நத்தம் வீரர்களுக்குக் கொஞ்சம் தைரியம் வந்துவிட்டது. கலியமானை எதிர்க்கத் தயாராயினர். கடற்கரை ஓரத்தில் நின்று கொண்டு

ஆயிரக்கணக்கான அம்புகளை கலியமான் மீது எய்தனர். அவை குண்டூசி அளவே இருந்த போதிலும், விஷ அம்புகளாக இருந்ததால் கலியமானைத் துன்புறுத்தின. முகத்திலும், தலையிலும் காயங்கள் ஏற்பட்டன. அம்புகள் தன் கண்களைத் தாக்காமல் இருப்பதற்காக தன் மூக்குக் கண்ணாடியை அணிந்து கொண்டார்.

பின் அந்தக் கொக்கிகளிலுள்ள கயிறுகளை எல்லாம் பெரிய கயிற்ருேடு பிணைத்து இழுக்கத் தொடங்கினர். அவை



நங்கூரம் பாய்த்து நிறுத்தப்பட்டிருந்ததால் அசையவே இல்லை. உடனே கலியமான் தன் பையிலிருந்த கத்தியை எடுத்துச் சென்று நங்கூரங்களை அறுத்து விட்டார். பின் மீண்டும் இழுத்தார். நூறு போர்க் கப்பல்களும் கலியமான் பின்னுல் வந்தன.

எல்லாப் போர்க் கப்பல்களும் ஒரே சமயத்தில் இலவநத்தத்தை நோக்கிச் செல்வதைக் கண்ட ழுவநத்தம் வீரர்கள் ஒன்றும் செய்வதறியாது திகைத்து நின்றனர். உதவி செய்ய யாருமில்லாத நிலையிலும் உதவி உதவி என்று கத்தத்

தொடங்கினர். கலியமான் எவ்வித ஆபத்தும் இன்றி இலவ நத்தத்தை நோக்கிச் சென்றார். இலவநத்த கடற்கரையில் அளவு கடந்த ஜனத்திரள் குழுமியிருந்தது. எதிரிகளின் கப்பல்கள் தம் நாட்டை நோக்கி வருவதைக் கண்டு பயந்தனர். ஏனெனில் கலியமான் நீரில் முழ்கியபடி நீந்தி வந்து கொண்டிருந்தார். தம்மைத் தாக்க வருபவர்களை எப்படி எதிர்ப்பது என்று புரியாமல் தத்தளித்தனர். அவர்களை எதிர்க்கக் கையில் ஆயுதங்களுடன் தயாராக நின்று கொண்டிருந்தனர். கடற்கரையை அடைந்ததும் கலியமான் நீரிலிருந்து எழுந்து, 'இலவநத்தம் அரசர் வாழ்க! இலவநத்தம் அரசர் வாழ்க!' என்று கூக்குரலிட்டார். உடனே மக்கள் பேராச்சரியம் அடைந்தவர்களாக மகிழ்ச்சியடைந்து குதித்துக் கூத்தாடினார்கள்.

கலியமான் செய்த அரும்பெரும் செயலைக்கண்ட இலவநத்த அரசரும், மக்களும் அவரைப் போற்றிப் புகழ்ந்தனர். இலவநத்த அரசாட்சியிலேயே மிக உயர்ந்ததாகக் கருதப்படும் "செவ்வேள்" என்ற பட்டத்தை கயியமானுக்குக் கொடுத்து, அரசர் கௌரவித்தார்.

## 5

அதன்பின் கலியமான் மிக்க மதிப்புடனும், மரியாதையுடனும் நடத்தப்பட்டார். அவருடைய புகழ் இலவநத்தத் தீவின் மூலை முடுக்குகளிலெல்லாம் பரவி விட்டது. பயங்கர ஆபத்திலிருந்து நாட்டைக் காப்பாற்றியதால் நாட்டிலுள்ள ஒவ்வொருவரும் அவருக்கு நன்றி செலுத்தினர். ஆனால் அரசரும், அவரது அமைச்சர்களும் வேறுவிதமான எண்ணம் கொள்ளத் தொடங்கிவிட்டனர். அவ்வளவு கப்பல்களையும் ஒரே சமயத்தில் கலியமான் எளிதில் கைப்பற்றி விட்டதால் பழவநத்தம் தீவின்மேல் படையெடுத்துச் சென்று மற்ற கப்பல்களையும் கைப்பற்றி அந்நாட்டையும் அடிமைப்படுத்தி விடலாம் என்று நினைக்கத் தொடங்கி விட்டனர். பழவநத்தத்

ஹைக் கைப்பற்றி அந்நாட்டையும் அடிமைப்படுத்தி விடலாம் என்று நினைக்கத் தொடங்கி விட்டனர். பழவநத்தத்தைக் கைப்பற்றி அந்நாட்டிலும் குறுகிய முனைப்பக்கத்தி லேயே முட்டையை உடைக்க வேண்டும் என்ற சட்டத்தை அமுலாக்க வேண்டும் என்ற ஆசை பேராசையாக அரசரைப் பிடித்துவிட்டது.

அரசர் தம் விருப்பத்தை கலியமானிடம் தெரிவித்தார். கலியமான் அதற்கிணங்க மறுத்து விட்டார். சுதந்திரமாக வாழும் மக்களை அடிமைகளாக்கத் தான் உதவி செய்ய முடியாது என்று கூறிவிட்டார். இலவநத்தத்திற்கு எதிரிகளால் ஆபத்தில்லை என்பதால் இனிமேல் அமைதியாக வாழ்வதே நல்லதென்றும் அறிவுரை கூறினர்.

கலியமானின் பதிலைக் கேட்டு அரசருக்கு மிகவும் கோபம் வந்துவிட்டது. அதிலிருந்து கலியமான் மீது அரசர் சந்தேகப்படவும் ஆரம்பித்து விட்டார். இச்சமயத்தில் கலிய மான் பழவநத்தத் தீவுக்குப் போய் அந்நாட்டைச் சுற்றிப் பார்க்க விரும்புவதாக அரசரிடம் அனுமதி கேட்டதும் அரசரின் சந்தேகம் அதிகமாகி விட்டது. கலியமான் தனக்கும் தன் நாட்டுக்கும் எதிராகச் சதி செய்கிருரோ என்றே சந்தேகப் படத் தொடங்கி விட்டார்.

ஒரு நாள் இரவு கலியமானைத் தேடி அவரது வீட்டிற்கு அரசாங்க அதிகாரி ஒருவர் வந்து அவருடன் பேச விரும்புவ தாகக் கூறினர். உடனே கலியமான் அக்காலத்தில் உப யோகப்படுத்தப்பட்டு வந்த பெட்டி நாற்காலியை எடுத்துத் தன் மேஜை மீது போட்டு அவ்வதிகாரியை அமரச் செய்து விட்டுத் தான் கீழே அமர்ந்து கொண்டார். அவர் சொன்ன செய்தி கலியமானுக்கு மிகவும் ஆச்சரியத்தைக் கொடுத்தது. அரசரும் மந்திரிகளும் ரகசியமாகக் கூட்டம் நடத்தி கலிய மானைப் பற்றி ஆலோசனை நடத்தியதாக அந்த அதிகாரி கூறினர். கலியமான் இலவநத்தத் தீவிற்கு எதிராகச் சதி செய்வதாகக் குற்றம் சாட்டி அவரைத் தூக்கிவிட வேண்டும் என்று மந்திரிகள் ஆலோசனை கூறியதாகவும், ஆனல் அரசர்

அவர்கள் கருத்தை ஏற்காமல் கலியமானுடைய கண்களைப் பிடுங்கிவிட்டு, பட்டினி போட்டுக் கொல்ல வேண்டும் என்று கூறியதாகவும் அந்த அதிகாரி கூறினர்.

இன்னும் இரண்டு மூன்று நாட்களில் அரசர் தன் கட்டளையைத் தெரிவிப்பார். உடனே படைவீரர்கள் அத்தண்டனையை நிறைவேற்ற ஆரம்பித்து விடுவார்கள் என்றும் அந்த அதிகாரி கூறினர். அதைக் கேட்டதும் கலியமானுக்குக் கோபம் கோபமாக வந்தது! இந்த ஆபத்திலிருந்து எப்படித் தப்பிப்பது என்று யோசித்துப் பார்த்தார். செய்யாத குற்றத்திற்காகத் தண்டனை அனுபவிப்பதைவிட அந்நாட்டைவிட்டு ஓடிவிடுவதே மேல் என்று தீர்தானித்தார்.

எங்கே ஓடுவது? நாலாபக்கமும் கடல்! அவருக்குத் தெரிந்த ஒரே அயல்நாடு பழவநத்தம் தான்! முன்பே பழவநத்தம் செல்ல அனுமதி கேட்டுத் தோல்வியடைந்திருக்கிறர். எனினும் இப்போது அங்கே போவதைத் தவிர வேறு வழியே இல்லை.

முதலில் இலவநத்த அரசருக்குத் தான் சில நாட்கள் வெளியே போக விரும்புவதாகவும், கூடிய சீக்கிரம் திரும்பி வந்துவிடுவதாகவும் ஒரு கடிதம் எழுதி அனுப்பினர். அவர் தன்னைக் கொலை செய்யத் திட்டம் போட்டிருப்பது தனக்குத் தெரியும் என்று காட்டிக் கொள்ளவில்லை. பிறகு தன் பொருட்களையெல்லாம் எடுத்துக் கொண்டு கடற்கரைக்குச் சென்று ஒரு போர்க்கப்பலில் அவற்றை வைத்தார். எவ்வித காலதாமதமும் செய்யாமல் அப்போர்க்கப்பலை இழுத்துக் கொண்டு பழவநத்தம் தீவை நோக்கி நீந்தத் தொடங்கினர்.

கலியமான் பழவநத்தம் தீவின் கடற்கரையை அடைந்ததும் அருகிலிருந்த விரல் மனிதர்கள் எறும்புகளைப்போல் பல திசைகளிலும் தலைதெறிக்க ஓடத்தொடங்கி விட்டனர். கலியமான் சென்றமுறை அங்கு வந்தபோது போர்க்கப்பல்களை இழுத்துக் கொண்டு போய்விட்டதை நினைக்கவே அவர்களுக்குப் பயங்கரமாக இருந்தது. கலியமான் அவர்களுடைய

பயத்தைப் போக்கித் தான் நண்பனுகவே வந்திருப்பதாக அவர்களுக்கு உணர்த்த முற்பட்டார். தன் உடைமைகளை யெல்லாம் கப்பலிலேயே வைத்துவிட்டு, அவர்களை அன்புடன் அழைத்துத் தான் அவர்களுக்குத் தீங்கு செய்ய மாட்டார் என்று உறுதி கூறி அந்நாட்டின் தலைநகரத்திற்குச் செல்ல வழி கேட்டார். கொஞ்சம் துணிச்சல் போவழிகளான இரண்டுபேர் அவருக்கு வழி காட்ட இசைந்தனர் கலியமான் அவர்கள் இருவரையும் தன் கைகளில் எடுத்துக் கொண்டு அவர்கள் சொன்ன பாதை வழியாக நடக்கத் தொடங்கினுர். தலைநகரைச் சென்றடைந்ததும் தான் அரசரைப் பேட்டி காண விரும்புவதாக அரசரிடம் தெரிவிக்கும்படி அவ்வழிகாட்டிகளை அனுப்பி வைத்தார்.

உடனே பழவநத்தம் தீவின் அரசரும், அரச குடும்பத்தவர்களும் பிரபுக்கள், மந்திரி பிரதானிகளும் கலியமானைப் பார்வையிட வந்தனர். கலியமான் அரசரிடம் தான் பழவநத்தம் தீவைச் சுற்றிப் பார்ப்பதற்காகவே வந்திருப்பதாகக் கூறினுர். இலவநத்த அரசரின் பகையைப்பற்றி கலியமான் சொல்லிக் கொள்ள விரும்பவில்லை. அதைச் சொன்னுல் பழவநத்தம் மன்னர் தன்னை வரவேற்பதற்கும், அந்த நாட்டில் தங்க அனுமதிப்பதற்கும் பயப்படுவார் என்று நினைத்தார்.

தான் அந்நாட்டுக்கு நண்பனுகவே வந்திருப்பதை அரசருக்கு உணர்த்துவதற்காக கலியமான் மண்டியிட்டு வணக்கம் தெரிவித்தார். பழவநத்தம் மன்னர் தான் பயப்படவில்லை என்பதைக் காண்பித்துக் கொள்வதற்காகவே கலியமான் தனக்கு மிக அருகில் வருவதற்கு அனுமதித்ததோடு, கலியமானுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்கும்படித் தன் பணியாட்களுக்குக் கட்டளையிட்டார். அதனுல் சில நாட்கள் வரை எவ்வித பயமும் இல்லாமல் கலியமான் பழவநத்தம் தீவில் வசிக்க முடிந்தது. அங்கிருந்து தன் தாய் நாட்டிற்குத் தப்பிச் செல்ல வழி என்ன என்பதைப்பற்றி அமைதியாகச் சிந்திக்கவும் முடிந்தது.

6

பழவநத்தம் மன்னர் அன்புடன் வரவேற்று ஆதரவளித்த போதிலும் அங்கே ஆபத்தில்லாமல் நீண்ட காலம் தங்கியிருக்க முடியும் என்ற நம்பிக்கை கலியமானுக்கு ஏற்படவில்லை. தன்னுடைய எதிரிகள் தன்னைச் சும்மா விடமாட்டார்கள் என்பதை அவர் உணர்ந்திருந்தார். தான் எப்படியாவது தன் தாய் நாட்டிற்குச் சென்றுவிட வேண்டும். தன் குடும்பத்தவர்களைச் சந்திக்க வேண்டும் என்ற ஆவல் அவர் மனதிற்குள் உந்திக் கொண்டிருந்தது ஆனால் தாய் நாடு செல்ல வேண்டுமானால் அதற்கு ஒரு பெரிய படகு வேண்டும். கடல் பிரயாணத்திற்குப் பயன்படக்கூடிய அவ்வளவு பெரிய படகைக் கட்டிக்கொள்ள வசதி பழவநத்தத்தில் கிடையாது.

பழவநத்தம் தீவுக்கு வந்து மூன்று நாட்கள் ஆகிவிட்டன. கலியமான் கவலையோடு கடற்கரைக்குச் சென்று மணல் வெளியில் நடந்து கொண்டிருந்தார். திடீரென்று கடலில் ஏதோ ஒன்று மிதந்து வருவது அவர் கண்களில் பட்டது. கலியமான் நின்று உற்றுக் கவனிக்கத் தொடங்கினர். பிறகு நீரில் குதித்து அதன் அருகே நீந்திச் சென்றார். அதைப் பார்த்தவுடன் அவருக்கு உண்டான ஆச்சரியத்திற்கு அளவேயில்லை. அது ஒரு படகு! பெரிய படகு அது தான் கடலில் மிதந்து வந்துகொண்டிருந்தது. அது தலை குப்புறக் கவிழ்ந்தபடி மிதந்து வந்தது. அது யாருடையது என்று தெரியவில்லை. புயல் காற்றின்போது ஏதேனும் ஒரு கப்பலிலிருந்து தவறி வந்திருக்கலாம். அது பழவநத்தம் தீவிற்கு வந்து சேர்ந்தது தன்னுடைய அதிர்ஷ்டம்தான் என்றெண்ணி அகமகிழ்ந்தார்.

அந்தப் படகை கலியமானல் கரைக்கு இழுத்துவர முடியவில்லை. கலியமான் நேரே அரசரிடம் சென்று விஷயத்தைக் கூறித் தனக்கு உதவியாக பத்துப் பெரிய கப்பல்களையும்,

மூவாயிரம் கடற்படை வீரர்களையும் கொடுத்துதவும்படி கேட்டுக்கொண்டார். அரசரும் வேண்டிய உதவிகளைச் செய்தார். அவர்களது உதவியுடன் அந்தப் படகைக் கரைக்கு இழுத்து வந்து தலைகீழாகக் கவிழ்ந்து கிடந்த அந்தப் படகை நேராக நிமிர்த்தி நிறுத்தினர் கலியமான். அந்தப் படகு அதிக சேதமடையவில்லை. கலியமான் எல்லையில்லா ஆனந்தமடைந்தார். தீவில் வளர்ந்திருந்த பெரிய மரங்களை வெட்டி துடுப்புகள் தயாரித்துக் கொண்டார். தனக்கு உதவி செய்ய வந்த கப்பல்களையும் மூவாயிரம் கப்பற்படை வீரர்களையும் அப்படகில் ஏற்றிக்கொண்டு துறைமுகத்தை நோக்கிச் செலுத்தினர். அந்த அதிசயத்தைப் பார்ப்பதற்காக நாடே திரண்டு வந்துவிட்டது என்று சொல்லும்படியாக மக்கள் பெருந்திரளாக கடற்கரையை நோக்கி வந்தனர். அத்தகைய பெரிய படகையும், அதனைச் செய்து கடலில் செலுத்தக்கூடிய மக்களின் வலிமையையும் நினைத்து வியந்தனர்.

தான் பிரயாணம் செய்வதற்கு ஏற்ற பெரிய படகு கிடைத்த பிறகுதான் கலியமான் ஓரளவு நிம்மதியடைந்தார். எனினும் கலியமான் பிரயாணக்தைத் தொடங்குவதற்கு வதற்கு முன்னர் வழிப்பிரயாணத்திற்குத் தேவையான உணவும் நீரும் சேகரித்துக் கொள்ள வேண்டும். பாய்மரங்கள். பாய்கள் தயாரித்துக்கொள்ள வேண்டும். எனவே அதற்காக மறுபடியும் பழவநத்த மன்னரின் உதவியை நாடினர். ஆனல் அதற்குள் இலவநத்தத்திலிருந்து பயங்கரமான செய்தி ஒன்று வந்துவிட்டது.

வெகு விரைவில் திரும்பி வந்து விடுவதாகக் கூறிச் சென்ற கலியமான் நீண்ட நாட்களாகியும் திரும்பி வராதது இலவநத்தம் மன்னருக்கு ஆத்திரத்தை உண்டாக்கி விட்டது. பழவநத்தத்திற்குப் பயங்கரமான செய்தியோடு தூதுவன் ஒருவனை அனுப்பி விட்டார், நம்பிக்கைத் துரோகம் இழைத்த குற்றத்திற்காகக் கலியமானைத் தண்டிக்க விரும்புவதாகவும், இரண்டு மணி நேரத்திற்குள் கலியமானின் கைகால்களைக் கட்டி அனுப்பி வைக்கும்படியாகவும் கடுமையான கட்டளை பிறப்பித்திருந்தார் இலவநத்தம் அரசர்.

போரில் பழவநத்தம் தோல்வியடைந்திருந்ததால் இலவநத்தம் அரசரின் ஆணையை மீற அதன் அரசருக்கு துணிவிருக்கவில்லை. ஆனால் கலியமானுக்குத் தீமை செய்யவும் அவருக்கு மனமில்லை. பழவநத்தத்தில் கலியமானுக்கு சக்திவாய்ந்த பல நண்பர்கள் ஏற்பட்டிருந்தார்கள். அரசர் கலியமானை அழைத்துத் தன் படையில் சேர்ந்து போரில் இழந்த தனது கப்பல்களை மீட்டுத்தர வேண்டும் என்று இரகசியமாகக் கேட்டுக் கொண்டார். ஆனால் கலியமான் எந்த அரசரிட்மும் பணி செய்ய விருப்பவில்லை. தன் தாய்நாட்டிற்குத் திரும்பிச் செல்ல வேண்டும் என்ற ஒரே நோக்கத்தைக் கொண்டிருந்தார். அதையே பழவநத்த மன்னரிடமும் கூறினர்.

மூன்று நாட்கள் கழித்து இலவநத்த அரசருக்கு பழவநத்த அரசர் பதில் அனுப்பினர். அதில் இலவநத்த அரசர் விரும்பியதுபோல் கலியமானின் கால்களைக் கட்டி அனுப்புவது முடியாத காரியம் என்றும், அப்படிச் செய்ய முயற்சித்தால் அவர் ஆத்திரம் கொண்டு தம் இருநாடுகளையுமே அழித்துவிடுவார் என்றும் தெளிவாக எழுதினர். தவிர கலியமானுக்கு தற்போது ஒரு பெரிய படகு கிடைத்திருப்பதால் அதைக் கொண்டு அவர் தன் தாய்நாட்டிற்குச் சென்றுவிடத் திட்டம் போட்டிருப்பதாகவும், அதனல் இரு நாடுகளுமே இனிமேல் கலியமானைப் பற்றிய பயமில்லாமல் வாழமுடியும் என்றும் எழுதியனுப்பினர்.

அதன் பிறகு பழவநத்தம் மன்னர் கலியமானுடைய பிரயாணத்திற்கான ஏற்பாடுகளைத் துரிதமாகச் செய்தார். ஏராளமான பணியாட்களையும், பாய்பரம் தயாரிப்பதற்கு மிகவும் கனமான துணிகளையும் அனுப்பி வைத்தார். பெரிய மரங்களை வெட்டிப் பாய்மரங்களும். பல கயிறுகளை ஒன்ருகத் திரித்துக் கனமான கயிறுகளையும் தயாரித்துக் கொண்டு கலியமான் பிரயாணத்திற்குச் சித்தமானுர்.

வழிப் பிரயாணத்திற்கு வேண்டிய உணவுப் பொருட்கள், தண்ணீர், தாய்நாட்டிற்குச் சென்று தன் வீட்டில் வளர்ப்பதற்காக ஆறு பசுமாடுகள், இரண்டு காளைமாடுகள்,

ஆடுகள் எல்லாவற்றையும் தமது படகில் ஏற்றிக் கொண் டார். மற்றும் இலவநந்தம், பழவநத்தம் தீவுகளில் தான் தங்கியிருந்ததை தன் நண்பர்களிடம் நிரூபிப்பதற்காக அந் நாடுகளிலிருந்து பல அபூர்வமான பொருட்களேயும் மாதிரிக் காக எடுத்துக் கொண்டார்.

கலியமான் விரல் மனிதர்கள் சிலரையும் தன்னுடன் அழைத்துச் செல்ல விரும்பினுர். அவர்களும் ஆவலுடன் புறப்பட்டார்கள். ஆனுல் அதற்கு மட்டும் அனுமதியளிக்க அரசர் மறுத்து விட்டார். விரல் மனிதர்கள் தாங்களாகவே அவருடன் வர விரும்பினுல் கூட அவர்களைக் கலியமான் அழைத்துப் போகக்கூடாது என்று உறுதியாகக்கூறிவிட்டார்.

கலியமான் புறப்படும் நாளன்று அரசர் தனது குடும்பத்தி னருடன் கடற்கரைக்கு வந்திருந்தார். கலியமான் அவர்களி டம் வணங்கி விடைபெற்றுக் கொண்டார். அரசர் கலிய மானுக்கு இருநூறு பொன் நாணயங்கள் அடங்கிய ஐம்பது பைகளேயும், தன்னுடைய உருவப்படம் ஒன்றையும் அன் பளிப்பாக வழங்கினுர். கலியமான் அவற்றை அவருடைய ஞாபகார்த்தமாக தன் கோட்டுப் பையில் வைத்துக் கொண் டார். எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டு அவர் தன் படகில் ஏறினுர். இலவநத்தம். பழவநத்தம் என்ற அபூர்வமான தீவுகளேயும், அதன் மக்களேயும் விட்டுவிட்டு வேகமாகத் தன் படகைச் செலுத்தினுர்.

இரண்டு மூன்று நாட்கள் தன் படகில் பயணம் செய்த பிறகு ஒரு கப்பல் சென்று கொண்டிருப்பதைப் பார்த்தார். அதைப் பார்த்ததும் மிகுந்த ஆவலுடன் அக்கப்பலே நோக்கித் தன் படகை வேகமாகச் செலுத்தினுர். அக் கப்பல் தன் தாய் நாட்டுக் கப்பல் என்பதை அறிந்தபோது அவருக்கு உண் டான மகிழ்ச்சிக்கு அளவே இல்லே. அக்கப்பலின் தலேவர் கலியமானே அன்புடன் வரவேற்றுத் தமது கப்பலில் ஏற்றிக் கொண்டார். ஆனுல் அக்கப்பல் தலேவரிடமும் மற்ற மாலுமி களிடமும் தான் கண்ட விரல் மனிதர்களேப் பற்றிக் கலிய

மான் கூறியதும் அவர்கள் எல்லோரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள். கலியமானுக்குப் பைத்தியம் தான் பிடித்து விட்டது என்றே நினைத்துவிட்டார்கள். அவர் தன் கையோடு அழைத்து வந்திருந்த சிறிய ஆடுமாடுகளைக் காண்பித்த பிறகு தான் அவர்களுக்குச் சிறிது நம்பிக்கை ஏற்பட்டது. முதலில் அவர் சொன்னதைக் கேலியாக நினைத்தவர்கள் பிறகு ஆவலோடு கேட்க ஆரம்பித்தார்கள்.

பல நாட்களுக்குப் பிறகு கலியமான் தன் வீடு வந்து சேர்ந்தார். நீண்டகாலமாக அவரைப் பற்றிய தகவலே இல்லாததால் அவருடைய குடும்பத்தவர்கள் அவர் இறந்து போய்விட்டதாகவே எண்ணியிருந்தனர். அவரை நேரில் பார்த்தவுடன் அளவிலா ஆனந்தமடைந்தனர். அவர்களுக்கும் அந்த ஆடுமாடுகளைக் காண்பித்துத் தன் புதுமையான அனுபவங்களை எடுத்துக் கூறினார். உயிருள்ள சின்னஞ் சிறிய ஆடுமாடுகளைப் பற்றிக் கேள்விப்பட்டதும் அவ்வூர் மக்கள் கும்பல் கும்பலாகப் பார்வையிடத் தொடங்கினர். சில நாட்களுக்குப் பிறகு அபூர்வப் பொருள்களான அவற்றைக் கலியமான் நல்ல விலைக்கு விற்றுவிட்டார். மற்ற மாலுமிகள் சிலரும் இலவநத்தம், பழவநத்தம் தீவுகளுக்குப் போய் அந்நாட்டு மக்களைக் காண வேண்டும் என்று பல முயற்சிகளைச் செய்தனர். ஆனால் அதன் பிறகு யாராலும் அந்தத் தீவுகளைக் கண்டு பிடிக்கவே முடியவில்லை.

அவ்வளவு கஷ்டப்பட்டு உயிர் தப்பி வந்த கலியமான் பேசாமல் தன் வீட்டோடு இருந்திருக்கலாம். ஆனால் புதுப் புது இடங்களைப் பார்க்க வேண்டும். புதுப் புது மனிதர்களைச் சந்திக்க வேண்டும் என்று அவருடைய உள்ளுணர்ச்சி உந்திக் கொண்டே இருந்தது. இரண்டு மாதங்களுக்குப் பிறகு அவர் மறுபடியும் புறப்பட்டு விட்டார். இந்த முறை இலவநத்தம் பிரயாணத்தின்போது ஏற்பட்டதைவிட பல பயங்கரமான அனுபவங்களும், ஆபத்துக்களும்ஏற்பட்டன. அவற்றை அடுத்த பகுதியில் காணலாம்.

முற்றும்.

## இரண்டாவது பாகம்

### கலியமான் பூதமனிதர்களிடையே வாழ்ந்த வரலாறு



இலவநத்தம் தீவிலிருந்து திரும்பி வந்த பிறகு இரண்டு மாதங்களுக்குப் பின்னர் கலியமான் மறுபடியும் ஒரு கப்பலில் மருத்துவராகச் சேர்ந்து மீண்டும் தன் பிரயாணத்தைத் துவக்கினர். 'மச்ச கன்னி' என்ற அக்கப்பல் அரபு நாடுகளை நோக்கி வடமேற்குத் திசையாகப் போய்க் கொண்டிருந்தது. அக்காலத்தில் அரபு நாடுகளோடு தமிழகத்திற்கு நல்ல வியாபாரத் தொடர்பு இருந்தது ஆனல் கடல் பிரயாணம் என்னவோ சுலபமாக இருக்கவில்லை. பல இடங்களில் தங்கித் தான் போக வேண்டும். அபாயங்களும் அதிகம்.

'மச்ச கன்னி' தன் பிரயாணத்தைத் தொடங்கிய பின் சில நாட்களில் வடமேற்குப் பருவக்காற்று வீசத் தொடங்கி விட்டது. நாள் ஆக ஆக பருவக் காற்று புயலாக மாறிப் பலமாக வீசத் தொடங்கியது. கப்பல் ஆட்டம் கண்டுவிட்டது. கப்பல் தலைவரால் ஒரே திசையில் கப்பலைச் செலுத்த முடியவில்லை. கப்பல் திசைமாறிச் செல்ல ஆரம்பித்தது. காற்று இழுத்த திசையில் எல்லாம் கப்பல் ஓடிக் கொண்டிருந்ததால் அவர்கள் எங்கே இருக்கிறார்கள் என்பதே தெரியவில்லை. பாய்களை அவிழ்த்துவிட்டுத் தங்கள் உயிர்களைக் காப்பாற்றும்படி கடவுளை வேண்டிக் கொள்வதைத் தவிர வேறு வழி ஏதும் புலப்படவில்லை.

பல நாட்களுக்குப் பிறகு புயலின் வேகம் குறையத் தொடங்கியது. நல்ல வேளையாகக் கப்பலுக்குப் பெரிய சேதம் ஏதும் ஏற்படவில்லை. எந்த உயிருக்கும் ஆபத்து ஏற்படவும் இல்லை. மாலுமிகள் ஒருவாறாக நிம்மதியடைந்து பெருமுச்சு விட்டனர். ஆனல் குடி தண்ணீர் பற்றாக்குறை ஒரு பெரிய

பிரச்னையாகத் தோன்றியது. தண்ணீர் கிடைக்கவில்லையானல் எல்லோரும் தாகத்தினலேயே செத்து மடியவேண்டியதுதான். கப்பல் எங்கே இருக்கிறது என்பதே தெரியாத போதிலும் வடக்கே போனல் ஏதாவது ஒரு நாடு தென்படும் என்ற நம்பிக்கையில் கப்பலை வடக்கு நோக்கிச் செலுத்திக் கொண்டிருந்தார்கள்.

பல நாட்கள் பிரயாணம் செய்தும் எந்தத் தீவும் கண்ணுக்கு அகப்படவில்லை. எங்காவது கரை கண்ணில் படும் என்ற நம்பிக்கையையே இழந்துகொண்டிருந்த சமயத்தில் ஒரு மாலுமி எதையோ சுட்டிக் காட்டியபடி கத்தினன். ஓரத்தில் ஏதோ மணல்திட்டு கண்ணில் பட்டது. அங்கே ஒரு நாடு இருப்பதாக யாரும் கேள்விப்பட்டதில்லை. பல ஆண்டுகள் கடல் பிரயாணம் செய்தவர்களுக்குக்கூட அந்த இடம் என்ன என்பது புரியவில்லை. ஆனல் அப்போது அவர்கள் இருந்த நிலையில் அது எந்த நாடு அங்கே வசிப்பவர்கள் யார்? என்பதைப் பற்றியெல்லாம் அவர்கள் கவலைப்படவே இல்லை. அங்கே குடிப்பதற்குத் தண்ணீர் கிடைக்குமா என்ற ஒரே ஒரு சிந்தனை தான் அவர்கள் மனதில் இருந்தது. எனவே துணிவுடன் கரையை நோக்கிக் கப்பலைச் செலுத்தினர். கடற்கரை ஆழம் மிகவும் குறைவாக இருந்ததால் கடற்கரையிலிருந்து கொஞ்ச தூரத்திற்கப்பால் நங்கூரம் பாய்ச்சிக் கப்பல் நிறுத்தப்பட்டது. கப்பலிலிருந்து பனிரெண்டு மாலுமிகள் ஒரு படகை எடுத்துக் கொண்டு கடற்கரை அருகில் எங்காவது குடிதண்ணீர் கிடைக்குமா என்று பார்ப்பதற்காகக் கரையை நோக்கிச் சென்றனர். கலியமான் தானும் அந்நாட்டைப் பார்க்க விரும்புவதாகக் கூறி அவர்களுடன் சென்ருர்.

படகைக் கரையில் நிறுத்திவிட்டு எல்லோரும் இறங்கித் தீவில் நுழைந்தனர். மற்றவர்கள் கடற்கரை ஓரமாக எங்காவது நல்ல தண்ணீர் கிடைக்குமா என்று பார்ப்பதற்காக நடந்தனர். கலியமான் மட்டும் வேறு திசையாகச் சென்ருர். அத்தீவில் மனிதர்கள் வாழ்வதற்கான அறிகுறியே காணப்பட

வில்லை. குடிப்பதற்கு தண்ணீர் கிடைக்குமா என்பது சந்தேக மாக இருந்தது. கடற்கரையிலிருந்து சிறிது தூரத்தில் கரடு முரடான பாறைகளே காட்சியளித்தன. கண்களுக்குக் குளுமையான காட்சி ஏதும் தென்படவில்லை. குடி தண்ணீர் கிடைப்பதற்கான அறிகுறியும் காணப்படவில்லை. எனவே சோர்ந்து போன கலியமான் கப்பலை நோக்கித் திரும்பி நடந்தார். சிறிது தூரம் நடந்ததும் கலியமான் ஏறி வந்த படகு கப்பலை நோக்கித் திரும்பிச் சென்று கொண்டிருப்ப தைக் கண்டு திடுக்கிட்டார். படகை நோக்கி ஓடியபடி படகைத் திருப்பிக் கொண்டு வரும்படிக் கத்தினர். படகி லிருந்தவர்களுக்குக் காதில் விழவில்லை. அவர்கள் மேலும் வேகமாகத் துடுப்பு போட்டபடி கப்பலை நோக்கி விரைந்து சென்று கொண்டிருந்தனர்.

கலியமானுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. திகிலுடன் சுற்றும்முற்றும் பார்த்தவர் அப்படியே ஸ்தம்பித் துப்போய் நின்று விட்டார். படகிலிருந்தவர்கள் அதை வெகு வேகமாகச் செலுத்திக் கொண்டிருந்த காரணம் இப்பொழுது அவருக்குப் புரிந்தது. அப்படகைத் துரத்திக்கொண்டு ஒரு உருவம் கடலில் நடந்து கொண்டிருந்தது. கைகால் உறுப்பு களெல்லாம் மனிதர்களைப் போன்றிருந்தாலும் உருவத்தின் அளவைப் பார்த்தால் பயங்கரமாக இருந்தது. அது கலிய மானின் நண்பர்கள் சென்ற படகைப் பிடிக்க விரைந்து கொண்டிருந்தது. கடல் நீர் ஆழம் அதன் முழங்காலுக்குத் தான் இருந்தது. நாலே எட்டில் அது படகைப் பிடித்திருக் கும் ஆனல் கடலில் சிறு சிறு கூரான கற்பாறைகள் இருந்த தால் அந்த பூத மனிதனல் வேகமாக நடக்க முடியவில்லை. பூத மனிதன் படகைப் பிடித்தானு இல்லையா என்று கலிய மான் பார்த்துக்கொண்டு நிற்கவில்லை. அவனை ஒரே ஒரு த்டவைப் பார்த்தவுடனே பயந்து திகிலுடன் வேறு திசை யாகத் திரும்பி ஒரே ஓட்டமாக ஓடத் தொடங்கி விட்டார்.

பயத்தில் அவருக்கு எந்தப் பக்கம் ஓடுவது என்றே புரிய வில்லை. முதலில் தான் வந்த வழியாகவே திருப்பி ஓடினர்.

பிறகு உயரமான ஒரு குன்றின் மீது ஏறினர். குன்றின் மேல் நின்ற பொழுது நகரத்தின் பெரும்பாலான பகுதியைப் பார்க்க முடிந்தது. குன்றுக்கு அப்பால் நிலம் நன்கு உழுது, பயிர் செய்யப்பட்டிருப்பதைக் கண்டார். ஆனல் பயிர்கள் நம் நாட்டில் இருப்பது போலில்லே. சாதாரணமான புல்லே இருபதடி உயரத்திற்கு வளர்ந்திருந்தது. மற்ற பயிர்கள் அதற்குமேல் உயரமாக வளர்ந்திருந்தன.

படகைத் துரத்திச் சென்ற மனிதனிடமிருந்து தப்பிவிட வேண்டும் என்ற எண்ணம் தான் கலியமான் மனதில் முதலாவதாக இருந்தது. விளைநிலங்களுக்கு நடுவே இருந்த அகன்ற சாலையில் இறங்கி நடக்க ஆரம்பித்தார். சாலையின் இருபுறமும் சுமார் நாற்பதடி உயரமுள்ள பயிர்ச் செடிகள் வளர்ந்திருந்தன. அதற்கப்பால் என்ன இருக்கிறது என்பதைப் பார்க்க முடியவில்லே. அந்த வயலைக் கடக்க ஒரு மணி நேரம் பிடித்தது. அதற்கப்பால் ஒரு காடு இருந்தது. அதிலிருந்து சுமார் நூற்றிருபது அடி உயரத்திற்கு மேல் இருக்கும். அவற்றின் உச்சியைப் பார்க்கக்கூட முடியவில்லை, கண் பார்வைக்கு எட்டாத அளவு அவ்வளவு உயரமாக இருந்தன. வயல்களுக்கு இடையே போடப்பட்டிருந்த வேலியில் படிக்கட்டுகள் இருந்தன. ஆனல் ஒவ்வொரு படியும் சுமார் ஆறடி உயரமிருந்ததால் கலியமானல் அதில் ஏற முடியவில்லை. வேலியில் ஏதாவது சந்து இருக்கிறதா? அதனுள் புகுந்து அடுத்த வயலுக்குச் செல்லலாம் என்று கலியமான் பார்த்தார். அப்போது பூதம் போன்ற பெரிய உருவமுடைய மனிதன் ஒருவன் அடுத்த வயலிலிருந்து வந்து கொண்டிருப்பது தெரிந்தது. அவனைப் பார்த்ததும் கலியமானுக்குப் படகைத் துரத்திச் சென்ற பூதமனிதனின் நினைவுதான் வந்தது. அந்த மனிதன் ஒரு பெரிய கோபுரம் போல அவ்வளவு உயரமாக இருந்தான். நடக்கும்போது ஒரு எட்டுக்குப் பத்து கஜ தூரம் அடியெடுத்து வைத்தான். அவனைப் பார்த்தவுடனே கலியமானுக்கு ஏற்பட்ட திகிலும், ஆச்சரியமும் சொல்லும் தரமன்று. பயம் பிடித்துக் கொள்ள ஓட்டம்

எடுத்தார். அவன் கண்களுக்குத் தப்பி அங்கு விளைந்திருந்த பயிர்ச் செடிகளுக்கிடையில் மறைந்து கொண்டார்.

அந்த மனிதன் படிக்கட்டுகளில் ஏறியபடி பின்னுல் திரும்பி ஏதோ பேசினுன். அவனுடைய குரல் இடி இடிப்பது போலிருந்தது. அவன் சொன்னதைக் கேட்டு அதே மாதிரி உருவமுடைய ஏழு பேர் படிகளில் ஏறி வந்தனர். அவர்கள் முதலில் வந்த மனிதனைப்போல் உயர்ந்தரக ஆடைகள் அணிந்து கொண்டிருக்கவில்லை. எளிய உடையையே அணிந்திருந்தனர். முதலில் வந்தவன் அந்த நிலத்தின் சொந்தக்காரன் என்றும், மற்றவர்கள் அவனுடைய வேலையாட்கள் என்றும் கலியமான் யூகித்துக் கொண்டார்.

வேலையாட்கள் நிலத்தில் இறங்கிப் பயிரை அறுவடை செய்யத் தொடங்கினர். புதிய அபாயம் ஒன்று தன்னைச் சூழ்ந்து கொண்டதை உணர்ந்தார். கலியமானுக்குப் பயம் பிடித்துக் கொண்டது. என்ன செய்வதென்று புரியவில்லை. அவர்கள் பெரிய பெரிய அரிவாள்களைக் கொண்டு வேகமாக அறுவடை செய்து கொண்டு வந்தனர். அரிவாள்கள் கலியமானை நெருங்கி வந்து கொண்டிருந்தன. எவ்வளவுதான் தான் ஓடினுலும் அந்த பூதங்களோடு போட்டியிட முடியாது. பயிர்கள் மரங்களடர்ந்த காட்டைப் போல் அடர்த்தியாக வளர்ந்திருந்ததால் அவற்றினிடையே புகுந்து ஓடமுடியவில்லை. சிறிது தூரத்திற்கப்பால் பலத்த காற்றினுல் பயிர்ச் செடிகள் எல்லாம் அப்படியே சரிந்து கிடந்தன. அதற்கு மேல் கலியமானுல் போகமுடியவில்லை. பின்னுல் பூதமனிதர்களான வேலையாட்களின் குரல் ஒலித்தது. கலியமான் தப்பிச் செல்ல வழியே இருக்கவில்லை.

செய்வதொன்றும் அறியாமல் தரையில் குப்புறப் படுத்துக் கொண்டு, தன் மனைவி, மக்களை நினைத்து விம்மி. விம்மியழத் தொடங்கி விட்டார். அவர் புறப்படும்போது அவருடைய மனைவி மக்கள், எல்லோரும் வேண்டவே வேண்டாம் என்றனர். யார் சொல்லையும் கேட்காமல் அவர் அந்தப் பிரயாணத்தை மேற்கொண்டார். இப்போது சாவே நேருக்கு

நேராக வந்து நின்றது. இலவநத்தத் தீவுக்குச் சென்றபோது அங்கிருந்த விரல்மனிதர்களுக்கு அவர் ஒரு பூதமாக விளங்கி யதை நினைத்தார். அவர்கள் தன்னை 'மனிதமலை' என்று அழைத்தார்கள். இலவநத்த வரலாற்று நூல்கள் தான் பழவ நத்தத் தீவின் கடற்படையைக் கைப்பற்றி நாட்டிற்கு வெற்றி தேடித்தந்த நிகழ்ச்சியைச் சரித்திரப்புகழ் வாய்ந்ததாகக் குறிப்பிடும். ஆனால் இங்கு? விரல் மனிதர்களைப் பார்த்தால் தன் நாட்டவர்கள் எப்படி அலட்சியமாக நினைப்பார்களோ அதே மாதிரித் தன்னை இவர்கள் நினைப்பார்கள்! பூதங்களைப் போன்ற பெரிய மனிதர்களுக்கிடையே தான் ஒரு விரல் மனிதனைப் போன்று அகப்பட்டுக் கொண்டோமே என்று நினைத்தபோது கலியமானால் தாங்க முடியவில்லை. அதைவிட இந்தப் பூத மனிதர்கள் எவ்வளவுக் கெவ்வளவு பூதாகாரமாக இருந்தார்களோ அவ்வளவுக் கவ்வளவு கொடியவர்களாகவும் இருந்தால் தன் கதி என்ன ஆகும் என்று நினைத்தபோது திகில் பிடித்துக் கொண்டது.

கலியமான் பயந்து நடுங்கியபடி தானியக் கதிர்களுக் கிடையே விழுந்து கிடந்தார். அறுவடை செய்யும் பணியாட் கள் நெருங்கி வந்துகொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவன் கால்பட்டு கலியமான் நசுங்கிப் போயிருப்பார். அப்படிச் சீக்கிரமாகச் செத்துப் போய்விட்டால் நல்லது என்று நினைத்த போதிலும் பயத்தில் தன்னையுமறியாமல் கத்தி விட்டார். சத்தம் கேட்கிறதே என்று கீழே குனிந்து பார்த்தான். அவ் வேலைக்காரன். சிறிது நேரம் கழித்துத்தான் கலியமான் கீழே கிடப்பதை அவன் பார்த்தான். சிறு விஷப் பூச்சிகளைக் கண்டு நாம் பயப்படுவதைப் போல கலியமானைப் பயந்து கொண்டே பார்த்தான். பின் தன் இரண்டு விரல்களால் கலியமான் இடுப்பைப் பிடித்து மேலே தூக்கிப் பார்த்தான். அந்தக் காட்சி ஒரு பெரிய காட்டு யானை தன் துதிக் கையால் ஒரு கொசுவைத் தூக்கிப் பிடிப்பது போலிருந்தது.

2

அம்மனிதன் தன்னை தரைமட்டத்திலிருந்து சுமார் அறுப தடி உயரத்தில் தூக்கிப் பிடித்ததும் கலியமானுக்கு உலகமே சுழல்வது போலிருந்தது. அவன் தன்னைக் கீழே போட்டு விட்டால் தன் கதி என்னுவது என்று பயந்தார். அவருடைய இடுப்பைப் பற்றியிருந்த அவனுடைய விரல்கள் துன்புறுத் தின. ஆயினும் கலியமான் அசையவில்லை. அவன் கீழே போட்டுவிட்டால் என்ன ஆவது என்று பயந்து பேசாமல் இருந்தார். பூதமனிதன் கலியமானை அந்தரத்தில் பிடித்தபடி ஆராய்ந்தான். அவனுக்கும் மிகவும் ஆச்சரியமாக இருந்தி ருக்க வேண்டும். விஷப்பூச்சி எங்கே தன்னைக் கடித்து விடுமோ என்று அவன் பயந்து போய்த் தன்னைத் தூக்கி யெறிந்து விடுவானோ என்று பயந்த கலியமான் தன் இரு கை களையும் கூப்பிக் கொண்டு மிகவும் பணிவுடன் பேசினர். அவருடைய பேச்சும் செயல்களும், அவனுக்குப் பிடித்து விட்டன. அவர் மனிதனைப் போலவே எல்லாக் காரியங்களை யும் செய்தது அவனுக்கு மிகவும் ஆச்சரியமாகவும் இருந்தது. அவன் தன்னைப் பார்க்கும்போது, அவன் இறுக்கமாகத் தன்னைப் பிடித்துக் கொண்டிருப்பது தனக்குத் துன்பமாக இருக்கிறது என்பதைச் சைகைகளால் உணர்த்த முயன்றர். அவன் அதைப் புரிந்து கொண்டான். பிறகு தன் கோட்டின் ஒரு மூலையில் வைத்துப் பிடித்து எடுத்துக் கொண்டு தன் எஜமானை நோக்கி ஓடினன்.

கலியமானைப் பார்த்து நிலச் சொந்தக்காரனுை அந்த விவசாயியும் மிகவும் ஆச்சரியமடைந்தான். ஒரு புல்லை எடுத்து கலியமான் அணிந்திருந்த உடை துணியா அல்லது அவரது தோலா என்று நீக்கிப் பார்த்தான். அந்தப் புல்லே 'ஒரு பெரிய கொம்பைப் போலிருந்தது. பிறகு மெல்ல கலிய மானது தலைமுடிகளை ஊதிவிட்டு அவரது முகத்தைப் பார்த்

தான். அதைப் போன்ற அதிசயத்தை அவன் பார்த்ததே இல்லை. குதூகலத்துடன் தன் வேலையாட்கள் எல்லோரையும் கூவி அழைத்தான். அவன் குரல் இடிமுழக்கம் போல் இருந்தது. பண்ணையாட்கள் எல்லோரும் கலியமானைச் சூழ்ந்து கொண்டனர். அவர்களிடம் இதைப் போன்ற மனிதனை எங்காவது பார்த்திருக்கிறீர்களா? என்று விசாரித்தான். அவர்கள் எல்லோரும் 'இல்லை' என்று தலையசைத்தனர், அதன் பிறகு மிகவும் கவனத்துடன் கலியமானை நான்கு கால் உள்ள



பிராணிகளைப் போன்று கை கால்களை நிலத்தில் ஊன்றச் செய்து நிற்க வைத்தான். கீழே விட்டவுடனே கலியமான் எழுந்து முன்னும் பின்னும் நடந்து காண்பித்தார். அதன் மூலம் தான் ஓடிப்போய்விட விரும்பவில்லை என்பதையும் உணர்த்தினர். உடனே அவர்கள் எல்லோரும் கலியமானைச் சூழ்ந்து உட்கார்ந்து கொண்டு அவரது நடவடிக்கைகளைக் கவனித்தனர்

எல்லோரும் தன்னையே கவனித்துக் கொண்டிருப்பதைப் பார்த்த கலியமான் தன் தலைக் குல்லாயைக் கழற்றி தலை

சாய்த்து வணக்கம் தெரிவித்தார். பின்னர் மண்டியிட்டு அமர்ந்தபடி தன் இரு கைகளையும் உயர்த்திக் கொண்டு உரத்த குரலில் கத்திப் பேசினர். அவர்களுக்குத் தன் பேச்சு புரியாது என்பதை நன்கு உணர்ந்திருந்த போதிலும் தன் செய்கைகளின் மூலம் தன்னைத் துன்புறுத்த வேண்டாம் என்று கேட்டுக் கொள்ள விரும்பினர். பிறகு தன் சட்டைப் பையிலிருந்து தங்க நாணயங்களைக் கொண்ட ஒரு பையை எடுத்துக் குடியானவனிடம் கொடுத்தார். குடியானவன் அதைத் தன் கண் அருகில் கொண்டு போய் உற்றுப் பார்த்தான். அது என்ன என்பதே அவனுக்கு விளங்கவில்லை. அதைப் பார்த்த கலியமான், அவரிடம் அப்பையைத் தரையில் வைக்கும்படி சைகை காட்டினர். பையைக் கீழே வைத்ததும் அவர் பையைத் திறந்து பொன் நாணயங்களைக் கீழே கொட்டினர். குடியானவன் அவற்றை மிகவும் ஆவலோடு பார்த்த போதிலும், அதைக் கொண்டு என்ன செய்வது என்பது அவனுக்குத் தெரியவில்லை. அதனல் தங்க நாணயங்களை மீண்டும் எடுத்துப் பைக்குள் போட்டுக் கொள்ளும்படி சைகை காட்டினன்.

குடியானவனுக்குக் கலியமானும் ஒரு மனிதப் பிறவி தான் என்பது நிச்சயமாகத் தெரிந்துவிட்டது. பல விஷயங்களைப்பற்றிக் கலியமானிடம் கேட்டான். அவன் பேசிய போது தலைக்குமேல் இடியுடன் கூடிய புயல் காற்று வீசுவது போல் இருந்தது பதிலுக்குக் கலியமானும் தன்னல் முடிந்த அளவு கத்திப்பேசி, தனக்குத் தெரிந்த மொழிகளிலெல்லாம் பதில் கூற முயன்ருர். ஆனல் இருவருக்கும் ஒருவர் பேசுவது மற்றவருக்குத் தெரியவில்லை.

சிறிது நேரம் கழித்து குடியானவன் தன் வேலையாட்களை வயலில் வேலை செய்ய அனுப்பி விட்டான். தன் கையைத் தரைமேல் திறந்து வைத்து அதன்மேல் கைக்குட்டையை விரித்துப் போட்டு கலியமானை அதன்மேல் வரும்படி சைகை காட்டினன். அவர் எந்தவித மறுப்பும் கூருமல் அவனுடைய கையின்மேல் ஏறி கைக்குட்டைமேல் படுத்துக் கொண்டார்.

குடியானவன் அவருடைய தலையை மட்டும் விட்டு விட்டுக் கைக்குட்டையால் உடம்பைச் சுற்றி எடுத்துக் கொண்டு தன் வீட்டிற்குச் சென்றான்.

குடியானவன் மனைவி கலியமானைப் பார்த்தவுடன், நம் வீட்டுப் பெண்கள் எலியைப் பார்த்து விட்டால் அலறியடித்துக்கொண்டு ஓடுவதைப் போல் கலியமானைக் கண்டு பயந்து கத்திக் கொண்டு ஓடினாள். வெகு நேரம் வரை அவர் அருகில் வரவே பயப்பட்டாள். தூரத்திலிருந்தபடியே அவருடைய நடவடிக்கைகளைக் கவனித்துக் கொண்டிருந்தாள். தன் கணவன் சொல்வதையெல்லாம் கலியமான் செய்வதைக் கண்டதும் பயம் தெளிந்து அருகில் வந்தாள். காலப் போக்கில் அவர் மீது அவளுக்கு மிகவும் பிரியம் ஏற்பட்டு விட்டது

குடியானவன் வீட்டிற்குத் திரும்பி வந்தபோது மணி பனிரெண்டு. சமையல்காரன் உணவு பரிமாறினான். சுமார் இருபத்து நான்கு அடி நீளமுள்ள ஒரே பெரிய தட்டில் உணவு பரிமாறப்பட்டிருந்தது. அதைச் சுற்றிலும் குடியானவன், அவன் மனைவி, அவர்களது மூன்று பிள்ளைகளும், ஒரு பாட்டியும் சாப்பிட அமர்ந்தனர். எஜமானர் கலியமானைத் தூக்கி மேஜையின்மேல் தமக்குப் பக்கத்தில் வைத்துக் கொண்டார். அந்த மேஜை முப்பதடி உயரம் இருந்ததால் கீழே விழுந்து விடாமல் இருப்பதற்காக அதன் விளிம்பருகே செல்வதற்கே கலியமான் பயப்பட்டார். குடியானவன் மனைவி ஒரு சிறிய தட்டில் கொஞ்சம் உணவு வைத்து கலியமான் முன் வைத்தாள். அவர் எஜமானிக்கு வணக்கம் தெரிவித்து விட்டு அதைச் சாப்பிடத் தொடங்கினார். எல்லோரும் வியப்புடன் பார்த்தனர். சிரித்து மகிழ்ந்தபடி கலியமான் செய்யும் ஒவ்வொரு செயலையும் குதூகலத்துடன் கவனித்தார்கள். பிறகு ஒரு சிறு குவளையில் தண்ணீர் கொண்டு வரப்பட்டது. சிறிய குவளை என்றால் அதுவே மூன்று படி பிடிக்கும் கலியமான் அந்தக் குவளையைத் தூக்க முடியாமல் தூக்கித் தண்ணீர் குடித்தார். அதைப் பார்த்து எல்லோரும் 'கொல்'

என்று சிரித்தார்கள். அவர்கள் சிரித்த சிரிப்பொலி கலிய மானுடைய காதுகளைச் செவிடாக்கிவிடும் போல இருந்தது.

சாப்பிட்டு முடிந்த பின்னர் கலியமானைத் தன் பக்கம் வரும்படி எஜமான் அழைத்தார். கலியமான் மேஜையின் மேல் நடந்து செல்லும்போது ஒரு ரொட்டித் துண்டின் மேல் தடுக்கி விழுந்து விட்டார். அவருக்கு அடிபடவில்லையானு லும் அவருக்கு ஏதேனும் காயம் பட்டுவிட்டதோ என்று அக் குடும்பத்தவர்கள் எல்லோரும் பெரிதும் வருத்தமுற்றிருப்ப தைக் கண்டார். கலியமான் தன் மேல் காயம் ஒன்றும் பட வில்லை என்று சைகை மூலம் தெரிவித்துவிட்டுத் தன் எஜமானரை நோக்கிச் சென்றார். அதற்குள் வேறொரு பெரிய ஆபத்து குறுக்கிட்டது. எஜமானனின் கடைசிப் பையன் கலியமானைத் தாவிப் பிடித்தான். அவனுக்கு சுமார் பத்து வயதிருக்கும். தாவிப் பிடித்தவன் கலியமானின் காலைப் பிடித்து உயரே தூக்கி வேடிக்கைப் பார்க்கத் தொடங்கி விட் டான். அவன் கீழே போட்டிருந்தால் கலியமான் செத்தே போயிருப்பார். ஆனால் அதற்குள் எஜமானர் அவனிட மிருந்து கலியமானைப் பிடுங்கிக் கொண்டார். அதோடு மட்டு மல்லாமல் ஓங்கி ஒரு அறை கொடுத்து, அந்த இடத்தை விட்டுப் போகும்படிக் கூறினார். அந்த அறை நம் நாட்டு வீரர்கள் இருபது பேரை பேச்சு மூச்சில்லாமல் விழச் செய்தி ருக்கும். கலியமான் பையனை வெளியே அனுப்ப வேண்டாம் என்று சைகை காட்டித் தடுத்து விட்டார் தன்னால் அவன் வெளியேற்றப்பட்டால் அதற்காகப் பிறகு அவன் தன்னைப் பழிவாங்க நினைத்தால் என்ன செய்வது என்ற பயத்தினாலேயே அப்படிச் செய்தார். அவனருகில் சென்று அவன் கையைப் பிடித்து முத்தமிட்டுத் தான் அவனை நேசிப்பதாகக் காட்டிக் கொண்டார். அந்தப் பையனும் அவரை அன்புடன் தொட் டுப் பார்த்தான்.

சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது அந்த வீட்டுப் பூனை எஜமானியம்மாளின் மடிமேல் தாவிக் குதித்தது. அது கத்திய சப்தம் பத்து இயந்திரசாலைகள் வேலை செய்யும்போது

ஏற்படும் ஓசைபோல் பயங்கரமாக இருந்தது. அதன் உருவம் அதைவிடப் பயங்கரம்! மூன்று காளை மாடுகள் சேர வேண்டும். அவ்வளவு பெரிதாக இருந்தது அந்தப் பூனை. அதன் கோபக் கண்களைப் பார்த்ததுமே கலியமான் பயந்து நடுங்கினார். ஆனால் பூனை சுமார் ஐம்பதடி தொலைவில் இருந்தது. எஜமானியம்மாள் அது கலியமான் மேல் பாய்ந்துவிடாமல் பிடித்துக் கொண்டிருந்தாள். அதனால் பூனையால் அபாயம்




ஏற்படவில்லை' தவிர அந்தப் பூனை கலியமானைத் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. அவர் அதனருகில் சென்றபோது அது பயந்து ஒடுங்கிக் கொண்டது. அதன் பிறகு கலியமான் தான் அந்தப் பூனையைப் பார்த்துப் பயப்படாமலிருந்ததால் அது தன்னை ஒன்றும் செய்யாது என்று கண்டு கொண்டார். எஜமானரின் வீட்டிலிருந்த நாய்களைக் கண்டும் அவர் பயப்படவில்லை. ஒரு நாய் யானையைப்போல ஒரு பெரிய உருவ

முடையதாக இருந்தது. இன்னென்று அதைவிட உயரமாக ஆனால் பருமன் குறைவாக இருந்தது. அவை கலியமானை ஒன்றும் செய்யவில்லை. அந்தப் பிராணிகள் அவரிடம் மரியாதையோடு சற்று ஒதுங்கியே நடந்து கொண்டன.

எல்லோரும் சாப்பிட்டு முடித்த பின்னர் வேலைக்காரி ஒருத்தி எஜமானரின் ஒரு வயதுக் குழந்தையை கையில் எடுத்துக் கொண்டு வந்தாள். அது கலியமானைப் பார்த்ததும் 'ஓ'வென்று கத்தி அடம் பிடித்த ஓசை சுமார் இருபது மைல் தூரம் கேட்டிருக்கும். குழந்தைகள் விளையாட பொம்மை கேட்பது போல அது கலியமானை விளையாடக் கேட்டது. எஜமானி உடனே கலியமானைத் தூக்கிக் குழந்தையின் அருகில் வைத்தாள்- உடனே அந்தக் குழந்தை பொம்மையை எடுப்பதுபோல் அவரைத் தாவிப் பற்றியெடுத்து தன் வாய்க்குள் வைத்துக் கொண்டது.

கலியமான் பயந்து போய் அலறிவிட்டார், குழந்தையும் பயத்தால் திடுக்கிட்டுப் போய் கலியமானைக் கீழே போட்டு விட்டது. நல்ல வேளை எஜமானி சட்டென்று தன் முன்றானையில் ஏந்திக் கொண்டாள். இல்லாவிட்டால் அவருடைய கழுத்து முறிந்து போயிருக்கும். குழந்தையின் அழுகையை மாற்றுவதற்காக வேலைக்காரி ஒரு கிலுகிலுப்பையைக் கொண்டு வந்து ஆட்டினுள். அதற்குள் பெரிய பெரிய பாறைகளைப் போட்டு வைத்திருந்தார்கள். அந்தக் கிலுகிலுப்பை குழந்தையின் இடுப்பில் சேர்த்துக் கயிற்ருல் கட்டப்பட்டிருந்தது. குழந்தை இன்னும் அழுது கொண்டு தான் இருந்தது. ஆனல் அவர் பிராணபத்திலிருந்து தப்பி விட்டார்.

கலியமான் சோர்வுடன் மேஜையின்மேல் ஒரு மூலையில் அமர்ந்து அந்த மனிதர்களின் அருவெறுக்கத்தக்க அவலட்சணத்தைப்பற்றிச் சிந்தித்தார்- அதற்குக் காரணம் அவர்களுடைய பெரிய உருவந்தான். அவர்களது உடல் தோலில் நம் உடலில் கண்ணுக்குத் தெரியாத வியர்வைத் துளைகள் இருப்பதைப்போல் துளைகள் இருந்தன. ஆனல் அவை

பெரிய பெரிய துளைகளாக இருந்தன. உடல் ரோமம் குச்சி குச்சியாகப் புதர் போல் நின்றது. உடனே அவருக்கு இலவ நத்தவாசிகளான விரல் மனிதர்கள் தன் பெரிய உருவத்தைப் பார்த்துத் தனது தோல் மொற மொறப்பாகவும், கரடு முரடாக வும் இருப்பதாகக் கூறியது நினைவுக்கு வந்தது. அதைப் போலவே இவர்களும் பெரிய உருவமுடையவர்களாக இருப்ப தால் தான் தனக்கு அவலட்சணமாகத் தோன்றுகிறார்களோ என்னவோ? யாருக்குத் தெரியும்?

சாப்பிட்டபின் எஜமானர் தன் வேலையைக் கவனிப்பதற் குச் சென்றார். போகுமுன் தன் மனைவியை அழைத்து கலிய மானைக் கவனமாகப் பார்த்துக் கொள்ளும்படிக் கூறிச் சென்றார். அவர் மிகவும் சோர்வுடன் இருந்ததால் அவரைத் தூக்கித் தன் படுக்கையிலேயே வைத்து, தன் கைக்குட்டை யால் போர்த்திவிட்டாள். அந்தக் கைக்குட்டை கப்பலின் பாயைவிட அகலமாகவும் முரட்டுத் துணியாகவும் இருந்தது.

கலியமான் இரண்டு மணிநேரம் அயர்ந்து தூங்கியிருப் பார். தூக்கத்தில் தன் மனைவி, குழந்தைகளுடன் இருப்பது போல இன்பக் கனவு கண்டார். திடீரென்று கண் விழித்தவர் திடுக்கிட்டார். கோயிலைப் போன்ற அந்தப் பெரிய அறையில் அவர் மட்டும் தன்னந்தனியாக எட்டு கஜ உயரமும் ஆறு போன்ற அகலமும் உடைய படுக்கையில் படுத்திருப்பதைக் கண்டு மிகுந்த துக்கமடைந்தார். அந்த அறையில் இரண்டு எலிகள் ஓடி வந்து படுக்கையை முகர்ந்து முகர்ந்து பார்த்தன. அவை பெரிய நாய்களைப் போல் பயங்கரமான உருவ முடை யனவாக இருந்தன. அவர் போர்வையை இழுத்து மூடிக் கொண்டார். நன்றாகப் பதுங்கிக் கொண்டார். ஆனால் ஒரு எலி கலியமானைப் பார்த்துவிட்டு அவரைப் பிடிக்கத் தாவி யது. கலியமான் துள்ளி எழுந்து நின்று தன் உயிரைக் காப் பாற்றிக் கொள்வதற்காகத் தன் இடையிலிருந்த வாளை உருவிக் கொண்டு முன்னால் வந்த எலியின் மேல் பாய்ந்தார். அதற்குள் மற்றொர் எலி அவருக்குப் பின்புறமிருந்து தாக்கி யது. ஆனால் கலியமான் தன் வாளால் முன்புறமிருந்த

எலியைக் கொன்று விட்டதைப் பார்த்தவுடன் பயந்து ஓடிப் போய் விட்டது. இவ்வாறாக இன்னொரு பெரிய ஆபத்தி லிருந்தும் கலியமான் தப்பினார்.

சிறிது நேரத்திற்குப் பின் அந்த அறைக்குள் வந்த எஜ மானி கலியமான் மேல் ரத்தக் கறை படிந்திருப்பதைக் கண்டு திடுக்கிட்டு விட்டாள். வேகமாக ஓடிச் சென்று கலிய மானைத் தூக்கி எடுத்தாள். ஆனால் கலியமான் செத்துப் போன எலியைச் சுட்டிச் சுரண்டித்ததும் கலியமானுக்கு அடி படவில்லை என்பதைக் கண்டு நிம்மதியடைந்தாள். அதிலி லிருந்து எஜமானனும், எஜமானியும் மிகவும் கவனமாக அவரைப் பாதுகாத்தனர்.

## 2

எஜமானனுக்கு ஒன்பது வயதுடைய பெண்ணொருத்தி இருந்தாள். அவள் தையற்கலையில் மிகவும் கெட்டிக்காரி. தன் தம்பிப் பாப்பாவுக்கு அவள் தான் உடை தைத்துக் கொடுப்பாள், அவளும், எஜமானியம்மாவும் சேர்ந்து கைக் குழந்தையின் படுக்கையை கலியமானுக்காகத் தயார் செய்தார்கள், அப்படுக்கையை ஒரு மரப்பெட்டிக்குள் வைத்து அதை எலிகளுக்கு எட்டாதபடி ஒரு அடுக்குப் பெட்டிமேல் பத்திரமாக வைத்தனர். கலியமான் அவர் களோடு இருந்தவரை அந்தப் பெட்டிதான் அவருடைய படுக்கையாக உதவியது, அது வசதியாகவும், பாதுகாப்பாக வும் இருந்தது. சில நாட்களில் அவர்களுடைய மொழியை சிறிது சிறிதாகக் கற்றுக் கொண்டவுடன தனக்கு வேண்டி யதைக் கேட்டுப் பெற்றுக் கொள்ளவும் முடிந்தது.

எஜமானின் பெண் குணவதி தான் கலியமானுக்கு ஆயாவாகவும் ஆசிரியையாகவும் இருந்தாள். அதோடு கலிய மானுக்கு வேண்டிய எல்லாம் பணிவிடைகளையும் செய்து

வந்தாள். கலியமானுக்கு அந்த நாட்டில் கிடைக்கக் கூடிய மிகமிருதுவான துணியில் ஏழு சட்டைகள் தைத்துக் கொடுத்தாள். அவளே அவற்றைத் தன் கையால் துவைத்தும் கொடுப்பாள். அவர்கள் மொழியைக் கற்றுக் கொடுத்ததும் அவள் தான். கலியமான் ஒவ்வொரு பொருளையும் கை நீட்டிக் காண்பிக்கும்போது அவர்கள் மொழியில் அப்பொருளின் பெயரைக் கூறுவாள். விரைவில் அவர்கள் மொழியில் தனக்கு வேண்டியதைக் கேட்டு வாங்கிக் கொள்ள அவரால் முடிந்தது, நல்ல குணமுடையவளாக விளங்கியதால் அவளைக் கலியமான் குணவதி' என்று அழைத்தார். அவள் தன் வயதுக்கு தக்கபடி வளராமல் சுமார் நாற்பதடி உயரம் தான் இருந்தாள். கலியமானுக்கு 'ஊசி ராஜா' என்று செலலப் பெயர் வைத்து அழைத்தாள். நாளடைவில் அந்தப் பெயரே அந்தத் தீவு முழுவதும் வழங்கத் தொ_ங்கி கலியமானை எல்லோரும் ஊசி ராஜா என்றே அனழத்தனர்.

குணவதி ஒரு கண நேரம் கூட கலியமானைப் பிரிந்து செல்லவில்லை. கலியமானும் அவளைப் பிரிந்து இருக்க முடியவில்லை. அவள் செய்த உதவிக்கெல்லாம் இந்த ஜென்மத்தில் நன்றிக் கடன் செலுத்தவே முடியாது என்று நினைக்கலானார்,

சில நாட்களில் அக்கம்பக்கத்திலுள்ளவர்கள் எல்லோருக்கும் கலியமானைப் பற்றிய செயதி தெரிந்துவிட்டது, மனிதனைப்போலவே இருக்கும் ஒரு சின்னஞ்சிறிய பிராணி தம் எஜமானுக்குக் கிடைத்திருப்பதாகப் பேசிக் கொண்டார்கள். அந்தச் சின்ன மனிதனுக்கு அவனுடைய மொழியில் பேசவும் தெரியும் என்றும் ஆனால் அவன் தங்கள் மொழியிலும் சில வார்த்தைகளைக் கற்றுக் கொண்டிருப்பதாகவும் பேசிக்கொண்டனர். அந்தச் சின்ன மனிதன் இரண்டு கால்களால் நேராக நடப்பதாகவும், சொன்னபடி கேட்கக் கூடிய சாதுவான பிராணியாக இருப்பதாகவும்,

கூப்பிட்டவுடன் வருவதாகவும் ஒரு மூன்று வயதுப் பெண் குழந்தையைவிட அழகான நிறம் உடையதாகவும் பேசிக் பேசிக்கொண்டார்கள். எஜமானருக்கு நெருங்கிய நண்பரான பக்கத்து வீட்டுக்காரர் அது உண்மைதானா என்று பார்ப்பதற்காக வந்தார் உடனே எஜமான் கலியமானை அழைத்து மேஜையின் மேல் எடுத்து வைத்தார். மேஜையின் மேல தன் எஜமான் சொனனது போல் முன்னும் பின்னும் நடந்து காண்பித்து விட்டு உடைவாளைக் கையில் உருவிப் பிடித்துக் கொண்டு குனிந்து வணக்கம் தெரிவித்துவிட்டு அவர்களது மொழியில், "நலம்தானா நண்பரே?" என்று விசாரித்தார்.

வந்திருந்த ப்க்கத்து வீட்டுக்காரருக்குக் கண் பார்வை கொஞ்சம் குறைவு. கலியமானை மேலும் நன்றாக பார்ப்பதற்கரக அவர் தனது மூக்குக் கண்ணாடியை எடுத்துத் துடைத்து விட்டு மூக்கின் மேல் மாட்டிக் கொணடார். அதைப் பார்த்சதும் கலியமானுக்கு சிரிப்பை அடக்க முடியவில்லை. கொல் என்று சிரித்து விட்டார். கண்ணாடிகளுக்குப் பின்னால் அவரது கண்கள் ஜன்னல் வழியே தெரியும் இரண்டு முழு நிலவுகளைப் போல் அவ்வளவு பெரியவையாகக் காணப்பட்டது தான் காரணம். அதைப் புரிந்து கொண்ட எஜமானரும், எஜமானியும் கூட சிரித்து விட்டார்கள். அதனால் தானோ என்னவோ அவரைக் கொண்டு போய் நகரில் சந்தை கூடுகிற நாட்களில் வித்தை காண்பித்தால் நிறைய சம்பாதிக்கலாம் என்று யோசனை கூறிவிட்டுச் சென்றார்.

எஜமானரும், அவருடைய நண்பரும் தங்களுக்குள் கிசு கிசு என்று பேசிக் கொள்வதையும் சில சமயங்களில் தன்னைச் சுட்டிக் காண்பிப்பதையும் பார்த்த கலியமான் ஏதோ சதி நடைபெறுகிறது என்பதை தெரிந்து கொண்டார். மறுநாள்காலை தான் எஜமானரின் திட்டம் என்ன என்பதை குணவதி கலியமானிடம் கூறினாள். குணவதி தன் தாயின் மூலம் அவ்விஷயத்தை அறிந்து கொண்டாள். குணவதி கலியமான் இத்தகைய இழிவான நிலைக்கு ஆளாக்கப்

படுவதை நினைத்துக் கவலையும் துக்கமும் அடைந்தாள். கடைத்தெருவில் வித்தை காண்பித்தால் யாராவது மூடனால் கலியமானுக்கு ஏதாவது ஆபத்து வந்து விடுமோ என்று பயந்தாள். யாராவது கலியமானைத் தூக்கி அவரு டைய காலைக் கையைப் பிய்த்து விட்டால் என்ன செய்வது என்று கவலையடைந்தாள். கேவலம் பணத்துக்காக அவரைக் கடைத் தெருவிற்குக் கொண்டு போய் வேடிக்கை காண் பித்தால் கலியமானுக்கு சங்கடமாக இருக்கும் என்றும் நினைத்தாள். கலியமானை விட குணவதி தான் மிகவும்



கலங்கினாள். ஆனால் கலியமான் அதைப் பற்றி அவ்வளவு கவலைப்படவில்லை. என்றாவது ஒரு நாள் தான் அவர்களிட மிருந்து தப்பிச் செல்ல முடியும் என்று கலியமான் நம்பினார். ஆதரவற்ற நிலையில் பூதங்களைப் போன்ற பெரிய மனிதர் களிடம் அகப்பட்டுக் கொண்டால் அடிமையாக இருப்பதைத் தவிர வேறு என்ன தான் வழி? பாண்டிய நாட்டு ராஜா வாகவே இருந்த போதிலும் பூதநத்தத்தில் அதைத் தவிர

வேறொன்றும் செய்திருக்க முடியாது என்று நினைத்து மனதைத் தேற்றிக் கொண்டார்.

நகரத்தில் அடுதத சந்தை கூடும் நாளன்று எஜமானர் கலியமானை ஒரு பெட்டிகருள் வைத்து எடுததுக் கொண்டு புறப்பட்டார். எஜமானர் குதிரையின்மேல ஏறி அமாந்த தும், அவருடைய மகள் குணவதியும் அவருக்குப் பின்னால் ஏறி அமர்ந்து கொண்டாள். அவள் தன் மடிமேல் கலியமான் இருந்த பெட்டியை வைத்துக் கொண்டாள். பெட்டியின் மேல் மூடி மூடப்பட்டது. அப்பெட்டியின் ஒரு பக்கம் காற்று உள்ளே புகுவதற்காகச் சிறு துளைகள் இருந்தன. குணவதி பெட்டிக்குள் மெத்தென்றுருபதறகாக ஒரு சால்வையைப் போட்டு வைத்திருந்தது மிகவும் வசதயாக இருநதது. இல்லாவிட்டால் கலியமான் துணடு துண்டாகச் சிதறிப் போயிருப்பார். ஏனென்றால குதிரை ஒவ்வொரு அடி யெடுதது வைக்கும் போதும் சுமார் நாறபதடி நூரம பாயந் தது. அது எழும்பிய உயரமும் பாய்ந்த வேர்மும் பெரிய புயலில் அகப்பட்டுக் கொணடு பந்தாடப்படும் கப்பலில் இருப்பது போலிருந்தது.

நகரத்திற்கு வந்து சேர்ந்ததும் எஜமானர் ஒரு விடுதி யில் தங்கினார். நகர வீதிகளில் ஊசி மனிதன் வேடிக்கை காட்டப் போவதை அறிவிப்பதற்காக ஒரு வேலைக்காரனை ஏவினார். அவன் தெருத்தெருவாக அறிவித்துச் சென்றான். அந்த விடுதியிலிருந்த மிகப் பெரிய அறையில் ஒரு மேஜை யின் மீது பெட்டியை வைத்து அதனருகில் ஒரு நாற்காலியில் குணவதி அமாந்து கொண்டாள். கலியமான் என்னென்ன செய்ய வேண்டும் எப்படிச் செய்ய வேண்டும் என்பதைக் குணவதி கூறுவாள். கலியமான் அதன்படி செய்து காட்ட வேண்டும் என்பது ஏற்பாடு. ஒரு தடவைக்கு முப்பது பேர் மட்டுமே வேடிக்கை பார்க்க அனுமதிக்கப் பட்டார்கள். குணவதியின் கட்டளைப்படி கலியமான் பெட்டியிலிருந்து வெளியே வந்து மேஜையின்மேல் முன்னும் பின்னும் நடந்

தார். அவள் கேட்ட கேள்விகளுக்கு அவர்களுடைய மொழியில் பதில் கூறினார். பார்வையாளர்களை வணங்கி வரவேற்பு கூறினார். விரல் அளவுக்கு ஒரு சிறிய குப்பியிலுள்ள தண்ணீரைக் குடித்தார். பின் தன் வாளை உருவி தலையைச் சுற்றிச் சுழற்றினார். மற்றும் தமக்குத் தெரிந்த வித்தைகளையெல்லாம் செய்து காட்டினார். ஒரு நாளைக்கு சுமார் பனிரெண்டு முறை வேடிக்கை பார்க்க அனுமதிக்கப் பட்டனர். ஒவ்வொரு தடவையும் கலியமான் அதே மாதிரிச் செய்ய வேண்டியிருந்தது. கலியமான் மிகவும் சோர்ந்து போய் விட்டார். வேடிக்கை பார்த்தவர்கள் ஊசி மனிதனின் சாகஸங்களைப் பற்றி வேடிக்கை விநோதமான கதைகளைக் கட்டிவிட்டு விட்டனர். அதனால் விடுதிக்கு வெளியே பெரிய கூட்டம் கூடி விட்டது. எல்லோரும் ஒரே சமயத்தில் உள்ளே வர முயன்றனர். கூட்டம் கட்டுக் கடங்காமல் கதவை உடைத்துக் கொண்டு உள்ளே புக முயற்சி நடை பெற்றது.

உள்ளே வந்தவர்கள் மேஜையின் அருகே வந்து கலியமானைத் தொட்டுப் பார்க்க விரும்பினர். ஆனால் எஜமானர் யாரையும் கிட்ட நெருங்கவிடவில்லை. பார்வையாளர்கள் மேஜையிலிருந்து சற்று தூரத்திலேயே நிறுத்தப்பட்டனர். ஆனால் ஒரு பள்ளி மாணவன் ஒரு கடலைக் கொட்டையை கலியமான் மீது எறிந்துவிட்டான். அது கலியமான் நெற்றி மேல் பட்டிருந்தால் அவரைக் கொன்றிருக்கும். நல்ல காலமாக உயிர் தப்பினார். எஜமானர் அந்தச் சிறுவனை நன்றாக உதைத்து வெளியே துரத்திவிட்டார்.

அடுத்த சந்தை நாளன்று ஊசி மனிதன் காட்சிகள் தொடரும் என்று எஜமானர் அறிவித்துவிட்டுக் கிராமத்துக்குப் புறப்பட்டார். கலியமானை எடுத்துக் கொண்டு போவதற்காக இன்னும் வசதியான பெட்டி ஒன்றைச் செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஏனென்றால் முதல் நாள் பிரயாணத்திற்குப் பின்னால் கலியமான் மிகவும் சோர்ந்து போனார். அவரால் எழுந்து நிற்கவோ வாயைத் திறந்து

பேசவோகூட முடியவில்லை. அந்த அசதி தீர்வதற்கு மூன்று நாட்களாகி விட்டன. வீட்டிலும் அவருக்கு ஓய்வு கிடைக்க வில்லை. அக்கம் பக்கத்தவர்கள், எஜமானரின் சொந்தக் காரர்கள் யாராவது கலியமானைப் பார்ப்பதற்காக தினந் தோறும் வந்துகொண்டிருந்தார்கள். தினசரி அவர் வேடிக் கை காட்ட வேண்டியிருந்தது. வாரத்தில் புதன் கிழமை ஒரு நாள் மட்டும் தான் விடுமுறை மற்ற ஆறு நாட்களும் மிகவும் கஷ்டப்பட்டு உழைக்க வேண்டியிருந்தது.

கலியமானால் நல்ல வருமானம் கிடைக்கும் என்பதைத் தெரிந்து கொண்ட எஜமானர் ராஜ்யத்தின் பெரிய நகரங் களில் எல்லாம் காட்சிகளை நடத்த வேண்டுமெனறு பேராசை கொண்டார். உடனே சுமார் மூவாயிரம மைல்கள் பிரயாணம் செய்து அத்தீவின் தலைநகர் வரை செல்லும் திட்டம் ஒன்றைத் தீட்டிவிட்டார். வழியில் உள்ள பல நகரங் களில் எல்லாம் காட்சிகளை நடத்த வேண்டுமென்று பேராசை கொண்டார்.

குணவதியும் புறப்பட்டாள். வழக்கம்போல் அவள் எஜமானருக்குப் பின்னால் குதிரையின் மேல் அமர்ந்து கொண்டாள். மடியில் கலியமான உள்ள பெட்டியை வைத் துக் கொண்டாள். அந்தப் பெட்டிக்குள் கலியமான சுகமாக இருப்பதற்கு வேண்டிய வசதிகள் செய்யப்பட்டிருந்தன. அவர் களோடு ஒரே ஒரு வேலையாள் மட்டும் அவர்களுக்கு வேண்டிய துணிமணிகள் முதலிய சாமான்களை எடுத்துக் கொண்டு வேறொரு குதிரையில் சென்றான்.

போகும் வழியிலுள்ள பெரிய நகரங்களிலும், பண்ணை விடுகளிலும் வேடிக்கை காட்டுவது எஜமானர் திட்டமாகை யால் அவர்கள் ஒவ்வொரு நாளும் கொஞ்ச தூரமே பிரயா ணம் செய்தனர் குணவதி கலியமானைப் பெட்டியிலிருந்து எடுத்து வெளியே வைத்து காற்று வாங்கவும், அந்த நாட்டில

பகுதிகளைக் காணவும் உதவி செய்தாள். ஆயினும் கலியமான் கீழே விழுந்து விடாமல் இருப்பதற்காக ஒரு கயிற்றினால் கட்டி இறுக்கமாகப் பிடித்துக் கொண்டிருப்பாள். அவர்கள் வழியில் ஆறு பெரிய நதிகளைக் கடந்து செல்ல வேண்டியிருந்தது, ஒவ்வொரு நதியும் கங்கை, நைலபோன்ற மிகப் பெரிய ஆறுகளைவிட மிகவும் அகலமாகவும், ஆழமாகவும் இருந்தன. சிறிய ஓடைகள் என்று சொல்லப்படுவன எல்லாம வைகை, தாமிரவருணி போலிருந்தன. சுமார் இரண்டரை மாதங்களுக்குப் பின்னர் தான் அவர்கள் பூதநத்தத் தீவின் தலைநகரான ஜகப்பிரசித்தம் அடைந்தனர்.

எஜமானர் ராஜபாட்டையில் அரண்மனைக் கருகிலிருந்த ஒரு விடுதியிலேயே தங்கினார், ஊசி மனிதனைப் பற்றி பிரமாதமாக விளம்பரம் செய்தார். கலியமான் வித்தை காட்டுவதற்காக தனி அரங்கு ஒன்றை நிர்மாணித்தார். அதில் தினசரி நிகழ்ச்சிகள் நடைபெற்றன. ஊசி மனிதன் செயத வேடிக்கைகளையும் அவன் தங்கள் மொழியில் பேசுவதையும, கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்வதையும் பார்தத மக்கள் பேராச்சரியம அடைந்து ஆரவாரம் செய்து தங்கள மகிழ்ச்சியை வெளிப்படுத்தனர். இம்போது அவர்கள பேசிக கொண்டதெல்லாம் கலியமானுக்கு நன்றாக விளங்கிறறு. குணவதி கலியமானுக்கு அவாகள் மொழியின் எழுத்துககளைக கறபிகக ஆரமபிததிருந்தாள். ஒரு நாளைககு பத்து முறை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. செய்ததையே மீண்டும மீண்டும செய்து மக்களை மகிழ்விக்க வேண்டியிருந்தது. அதனால சில நாட்களில் கலியமானின் உடல் நலம் மிகவும குறைப் போய் சீககிரமே செத்துப் போகும் நிலைமைக்கு வந்து விட்டார்.

## 4

எசமானர் ஏராளமாகச் சம்பாதித்து விட்டார. ஆனால் எத்தனை பணம் வந்த போதிலும் அவருக்கு ஆசை தீர

வில்லை. நாள் பூராவும் உழைத்து உழைத்து சோர்ந்து போன கலியமான் எழுந்து நிற்கக்கூட முடியாத அளவுக்கு மோசமான நிலையை அடைந்து விட்டார். இன்னும் சில நாட்களில் கலியமான் இறந்து விடுவார் என்ற நிலையை அடைந்தும்கூட எசமானர் அவருக்கு ஓய்வுகொடுக்கவில்லை அதற்குப் பதிலாக கலியமான் செத்துப் போவதற்குள் இன் னும் எவ்வளவு பணம் சேர்க்க முடியுமோ அவ்வளவு சேர்த்து விட வேண்டும் என்ற முடிவுக்கு வந்து விட்டார். ஆனால் அதிர்ஷ்டவசமாக அந்தப் பேராசைக் காரனிடமிருந்து தப்பித் துக்கொள்ளும் வாய்ப்பு கலியமானுக்குக் கிடைத்தது.

ஊசி மனிதன் செய்த வித்தைகளையும் அவனுடைய அதி சய உருவத் தோற்றத்தையும் பற்றிக் கேள்விப்பட்ட மகா ராணி அவனைப் பார்க்க விரும்பினார். உடனே ஊசி மனித னைக் கொண்டு வந்து காட்டும்படி உத்தரவுடன் அரண் மனைச் சேவகன் ஒருவன் வந்து விட்டான்.

எசமானர் உடனே கலியமானை அரண்மனைக்கு அழைத் துச் சென்றார் கலியமானின் தோற்றத்தையும், நடவடிக் கைகளையுப் பார்த்த மகாராணி பெருவியப்படைந்தாள். கலியமான் மேசையின் மீது முழந்தாளிட்டு வணங்கி மகா ராணியின் சண்டு விரலை எடுத்துக கண்களில் ஒற்றிககொண் டார். அதைக் கண்டு அகமகிழ்ந்து போன அரசி கலியமானி டம் அவருடைய தாய் நாட்டைப் பற்றியும், பிரயாணங் களைப் பற்றியும விசாரித்தாள். கலியமான் விவரமாகப் பதில் கூறினார். பின் அவருக்கு அரண்மனையில் வசிப்ப தற்கு விருப்பம் உண்டா என்று கேட்டாள் மகாராணி. அரண் மனையில் தங்கி மகாராணிக்குப் பணிவிடை செய்யும் பாக்கி யம் இடைத்தால் தான் பெருமையடைவார் என்றும், ஆனால் அதைப் பற்றித் தன் எசமானர் தான் தீர்மானிக்க வேண்டும் என்றும் கூறினார் கலியமான். மகாராணி குடியானவனைப் பார்த்து கலியமானை விலைக்கு கொடுக்கச் சம்மதமா என்று கேட்டாள், இன்னும் சில நாட்களில் கலியமான் செத்துப்

போகிற நிலையில் இருந்ததால் எஜமானர் உடனே அதற்கு சம்மதித்து விட்டார். மகாராணி குடியானவனுக்கு ஆயிரம் பொற்காசுகள் கொடுத்துக் கலியமானை விலைக்கு வாங்கிக் கொண்டாள்.

கலியமான் அரசியிடம் குணவதியையும் தன்னுடன் தங்க அனுமதிக்கும் படி வேண்டிக் கொண்டார். அரசியும் கலியமானைக் கவனித்துக் கொள்ள அவரிடம் பழக்கம் உள்ள ஒரு பெண் தேவை என்று கருதி அதற்குச் சம்மதித்தாள் அரண்மனையில் வேலை கிடைத்து விட்டதில் குணவதி பெரிதும் மகிழ்ந்தாள்.

எஜமானர் விடைபெற்றுக் கொள்ளும்போது கலியமான் உயர்ந்த இடத்தில் சேர்ந்து விட்டதறகாகப் பாராட்டினார். ஆனால் கலியமான் அவரிடம் அதிகமாகப் பேசவில்லை. கலியமான் அவருடைய பழைய எஜமானருடன் சரியாகப் பேசாததைக் கண்ட அரசி அதற்குக் காரணம் என்னவென்று வினவினாள். கலியமான் தன் எசமானரிடம் பட்ட கஷ்டங்களையெல்லாம் எடுத்துக் கூறினார். பணம் சம்பாதிப்பதற்காக இரவும் பகலும் வேடிக்கை காட்டும்படி நிர்பந்தப் படுத்தியதை விவரித்தார். அமர் கூறியதைக் கேட்டு மகாராணி மிகவும் ஆச்சரியமடைந்தாள். அவ்வளவு சிறிய உருவமுடைய ஒரு பிராணி அவ்வளவு தெளிவாகச் சிந்தித்து நிதாமாகப் பேசுவதை அவளால் நம்பவே முடியவில்லை. உச்சரிப்புக்கள் சரியாக வராவிட்டாலும், கலியமான் அவர்களுடைய மொழியை வெகு சரளமாகப் பேசினார்.

அதன்பின் மகாராணி கலியமானைத் தன் கையில் எடுத்துக் கொண்டு அரசரிடம் சென்றாள். அரசர் சிறந்த புத்திசாலி. எனினும் கொஞ்சம் கண்டிப்பான சுபாவம் உடையவர். மகாராணியின் கையில் கலியமான் குப்புற விழுந்து கிடப்பதைப் பார்த்ததும் கோபத்துடன், "என்ன அது? கையில் எதைத் தூக்கிக் கொண்டு வருகிறாய்?'' என்று கத்தினார். மகாராணி கலியமானை மேசையின் மேல் நிற்க

வைத்து அவரது வரலாற்றை எடுத்துக்கூறும்படிச் சொன்னார். கலியமான் தான் பூதநத்தத் தீவிற்கு வந்து சேர்ந்த கதையை சுருக்கமாக எடுத்துக் கூறினார். பிறகு அரசர் குணவதியை அழைத்து விசாரித்தார். குணவதி கலியமான் தன் தந்தையின் கைகளில் கிடைத்த விதத்தைக் கூறினாள் அந்த நாட்டிலேயே அரசர் தான் மிகவும் மதிநுட்பம் படைத்தவர், ஆயினும் கலியமான் உண்மையிலேயே ஒரு மனிதப் பிராணி தான் என்று நம்புவதற்கு அவரால் மூடியவில்லை. கடிகாரம் போன்ற யாந்திரமாக இருக்கக் கூடும் என்றே சந்தேகப்பட்டார் ஆனால் கலியமான் சொல்வதைக் கேட்டு, மற்ற மனிதர்களைப் போல் விவேகத்துடனும் புத்திசாலித்தனமாகவும் அவர் பதில் சொல்வதைப் பார்த்து மிக மிக ஆச்சரியமடைந்தார்.

அதன்பின் அரசர் கலியமானைப் பற்றி ஆராய்ச்சி செய்வதற்காக அந்நாட்டிலேயே மிகவும் புத்திசாலிகளான மூன்று மகா மேதைகளை வரவழைத்தார், அந்த மகா மேதைகள் மூன்று பேரும் மிகச் சிறிய உருவமுடைய கலியமானைக் கூர்ந்து கவனித்தபடி நீண்டகாலம் ஆராய்ச்சி நடத்தினார்கள். ஆனாலும் அவர்களால் ஒரு பனதான தீர்மானத்திற்கு வர முடியவில்லை. ஒரே ஒரு விஷயத்தில் மட்டும்தான் அவர்களுக்குள் ஒற்றுமை இருந்தது கலியமானைப்போன்ற சின்னஞ்சிறிய. தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியாத ஒரு பிராணியை சிருஷ்டித்தது இயற்கையின் தவறு என்ற பெரிய தத்துவம் தான் அது. உதாரணத்திற்கு அவர்களுடைய ஆராய்ச்சியில் ஒரு விஷயத்தை மட்டும் எடுத்துக் கூறலாம். அவர்கள் மூன்று பேரும் கலியமானுடைய பற்களைப் பரிசோதித்துப் பார்த்து அவர் ஒரு இறைச்சி சாப்பிடும் இனத்தைச் சேர்ந்த பிராணி என்பதைக் கண்டுபிடித்தனர். ஆனால் பூதநத்தத்திலுள்ள எந்தப் பிராணியையும் கலியமானால் கொன்று தின்ன முடியாது தவிர அத்தீவில் உள்ள சித்திரக் குள்ளர்களின் இனத்தைச் சேர்ந்தவராகவும் இருக்க முடியாது. ஏனென்றால் அந்நாட்

டில் மிகவும் குட்டையான சித்திரக்குள்ளனே முப்பதடி உயரம் இருந்தான். எனவே அந்த மகாமேதைகள் இயற்கை செய்த தவறு தான் கலியமான் தோன்றிய காரணம் காரணம் என்று முடிவு செய்து அதை அரசரிடம் கூறினார்கள். அதன் பிறகு கலியமானுக்குப் பேச வாய்ப்பளிக்கப்பட்டது. கலியமான் தான் பிறந்த நாட்டில் மனிதர்கள் எல்லோரும் தன் அளவே இருப்பதாகவும் அந்தப் பரிமாணத்திற்குத் தக்கபடியாகவே பிராணிகள், மரம், செடி, கொடிகள் எல்லாம் அமைந்துள்ளன என்றும் கூறினார். ஆனால் அந்த மேதாவிகள் ஏளனமாகச் சிரித்தார்கள். அவர்கள் அதை நம்பவேயில்லை. பூதநத்தத்தில் உள்ளவர்களுக்கு உலகம் முழுவதையும் தெரியும். கலியமான் சொன்னதைப் போன்ற நாடு பூலோகத்தில் கிடையாது என்றார்கள். அரசர் அவர்களை விட மதியூகம் படைத்தவர். அந்த மேதாவி களை அனுப்பிவிட்டு, கலியமானை அரசியிடம் விற்ற குடியானவனை அழைத்துவரச் சொன்னார். குடியானவனையும் அவனுடைய மகள் குணவதியையும் மிக நுணுச்கமாக விசாரித்தபின், கலியமான் தான் எவ்வாறு பூதநத்தத்திற்கு வந்து சேர்ந்தார் என்பதைப் பற்றிச் சொன்ன வரலாறு உண்மையாகவே இருக்கக் கூடும் என்று கருதினார். அரசியிடம் கலியமானைக் கவனமாகப் பாதுகாக்கும்படிக் கேட்டுக் கொண்டதோடு குணவதியையும் ஆயாவாக வைத்துக் கொள்ளும்படி உத்தரவிட்டார்.

கலியமானை நன்றாக வைத்திருக்க வேண்டிய பொறுப்பு குணவதியினுடையது அவளுக்கு நாலைந்து வேலைக்காரர்களையும் அரசர் அமர்த்தினார். அரசி கலியமான் படுத்துத் தூங்குவதற்கு ஒரு மரப்பெட்டியைச் செய்யச் சொல்லி ஆணையிட்டாள். நீள அகலத்தில் பதினாறு அடியும், உயரத்தில் பனிரெண்டு அடியும் வைத்துச் செய்யப்பட்டது. அப்பெட்டி பாண்டிய மன்னரின் படுக்கையறையைப் போல் மிக அழகாக இருந்தது. அதன்மேல் பக்கம் திறக்க முடியும். அது ஒன்று தான் வித்தியாசம். பெட்டியின் சுவர்களில் மிருதுவான பட்டு மெத்தைகள் வைத்துத் தைக்கப்பட்டிருந்தன. பெட்டியை மகாராணி எடுத்துச் செல்லும்போது

கலியமான் மேல் அடிபடாமல் இருப்பதற்காக .... எலிகள் புகுந்து விடாமல் கதவுக்கு பூட்டு போடப்பட்டு அதன் சாவியைக் கலியமானிடமே கொடுத்திருந்தார்கள்.

மகாராணிக்கு கலியமானிடம் மிகவும் பிரியம் ஏற்பட்டு விட்டது. அவள் சாப்பிடும் போதெல்லாம் கலியமான் தன் அருகிலேயே இருக்க வேண்டுமென்று விரும்பினாள். மகாராணி சாப்பிடும் மேஜையின் மேலேயே கலியமான் சாப் பிடுவதற்கு மேசை போடப்பட்டது. குணவதி அருகில் நின்று கலியமானுக்கு சாப்பாடு பரிமாறுவாள். கலியமான் சாப்பிடு வதற்கு வெள்ளித் தட்டுகள் குவளைகள், கிண்ணங்கள், கரண்டிகள் எல்லாம் செய்யப்பட்டிருந்தன. அவற்றை ஒரு வெள்ளிப் பெட்டியில் வைத்து குணவதி தன் கைப்பையில் போட்டு வைத்திருப்பாள். மகாராணி தன் தட்டிலிருந்து கொஞ்சம் உணவை எடுத்து கலியமான் தட்டில் வைப்பாள். அதிலிருந்து தனக்கு வேண்டிய அளவு கலியமான் சாப்பிட் டுக் கொள்வார். கலியமான் துளித்துளியாக அதை எடுத்துச் சாப்பிடுவதை மகாராணி வியப்புடன் பார்த்து ரசிப்பாள். மகாராணி நாசூக்காகத் தான் சாப்பிடுவாள். ஆனால் அவள் ஒரு வாய் சாப்பிடுவது நம் நாட்டில் பத்துப் பேருக்குப் போதும் அவள் சாப்பிடும் தட்டு பெரிய கொப்பரை போல வும், நீர் அருந்தும் குவளை பீப்பாய் போலவும் இருந்தன.

வாரத்தில் ஒரு நாள் அரச குடும்பத்திலுள்ள அனை வரும் ஒன்றாக அமர்ந்து சாப்பிடுவது வழக்கம். அன்று கலிய மான் அரசருக்குப் பக்கத்தில் அமர்த்தப்படுவார். கலிய மானை அரசரும் மிகவும் விருப்பினார். அரசர் இந்திய நாடுகளைப்பற்றி கலியமானிடம் அக்கறையோடு விசாரிப் பார். கலியமானும் தன்னுடைய நாட்டு வளத்தையும், அரசியல், வியாபாரம், மதக் கோட்பாடுகள் எல்லாவற்றையும் பற்றி விரிவாக எடுத்துரைப்பார். கலியமான் சொல்வதை யெல்லாம் அரசர் ஆர்வத்துடன் கேட்டாலும் அவற்றை உண்மையாக எடுத்துக் கொள்ள அவரால் முடியவில்லை.

சில சமயங்களில் கலியமானைத் தன் கையில் எடுத்துக் கொண்டு மெதுவாகத் தொட்டுப் பார்த்தபடி சிரிப்பார். தன் பிரதம மந்திரியிடம் "இந்த சிறிய மனிதனுக்கு தன் நாட்



டைப் பற்றி எவ்வளவு பெருமை பார்த்தீர்களா?" என்று கேட்டுவிட்டு, கலியமான் சொன்னதையெல்லாம் திரும்பத் திரும்பக் கூறிச் சிரிப்பார். அரசர் ஏளனம் செய்வதைக் கேட்டு கலியமானுக்கு ஆத்திரம் பொங்கும் ஆனால் அவ ரால் என்ன செய்ய முடியும்?

எல்லோரும் தன்னை அவமானப் படுத்துவதை நினைத்து வருந்துவார். ஆனால் ஆழ்ந்து யோசிக்கும்போது அது தவறு என்று தோன்றும். அவ்வளவு பெரிய உருவ முடைய மனிதர்களுக்கு, தன்னைப்போல் மிக மிகச்சிறிய உருவமுடைய ஒரு மனிதன் முட்டாளாகத் தோன்றினால் வியப்பில்லை என்று நினைத்து ஆறுதலடைந்தார். அரசி கண்ணாடியின் எதிரில் கலியமானைக் கொண்டுபோய் நிற்க

வைத்துத் தன்னையும் அவரையும் ஒரே சமயத்தில் பார்த்துக் கொண்டு வியப்படைவது வழக்கம். உண்மையிலேயே அவள் எவ்வளவு பெரியவளாக இருந்தாள். தான் எவ்வளவு சிறிய வராக இருந்தார் என்பதை நிலனத்த போது கலியமானுக்குத் தான் மேலும் மிக மிகச் சிறிய பிராணியாகத் தோற்ற மடையச் செய்தது.

# 5

அரண்மனையில் கலியமானுக்கு அதிகமான தொந்தரவு கொடுத்தது மகாராணியின் சித்திரக் குள்ளன் தான். பூக நத்கம் தீவிலேயே மிகவும் உயரம் குறைவான மனிதன் இவன் தான். சுமார் முப்பது அடி உயரம் இருந்தான். அதற்காக அவன் சில சமயங்களில் வருந்துவதுண்டு ஆனால் கலியமான் தன்னைவிட மிகமிகச் சிறிய ஆளாக இருப்பதைப் பார்த்த வுடன் அவனுக்கு ஒரு அலாதியான ஆத்மதிருப்தி ஏற்பட்டது கலியமான் இருக்கும் வழியாகச் செல்லும் போதுதான் ஏதோ பெரிய மனிதன் போல் நடப்பான். மேசை மேல் நின்றபடி அரண்மனைச் சீமாட்டிகளுடன் அல்லது பிரபுக்களுடன் கலிய மான் பேசிக் கொண்டிருப்பதைக் கண்டால் எகத்தாளமாக எதையாவது சொல்லி விட்டுப் போவான். கலியமான் அவனைத் தலைகுனிய வைப்பதற்காக ‘அண்ணே’ என்று கூப்பிடுவதும், ‘சண்டைக்கு வருகிறாயா? பார்க்கலாம்,’’ என்று சவால் விடுவதும் வழக்கம்.

ஒரு நாள் மத்தியானம் சாப்பிட்டுக் கொண்டிருந்த போது கலியமான் தன்னைக் கேலி செய்ததைப் பொறுக்காத அந்தக் கோமாளி கலியமானைத் தூக்கி பால் கிண்ணத்தில் போட்டு விட்டு ஒரே ஓட்டமாக ஓடி விட்டான். தலைகுப்புற விழுந்த கலியமான் நன்றாக நீச்சல் தெரிந்திருந்ததால் உயிர் பிழைத் தார் மகாராணி பயத்தால் நடுங்கிப்போய் அசையக் கூட முடி யாமல் உட்கார்ந்து விட்டாள். குணவதி தான் ஓடி வந்து

கலியமானை மேலே எடுத்து விட்டுக் காப்பாற்றினாள். அதற்குள் கலியமான் சுமார் இரண்டுபடி பாலைக் குடித்து விட்டிருந்தார் உடனே முதலுதவி அளித்து அவரைக் கொண்டு போய்ப் படுக்க வைத்து விட்டனர். அந்தக் கோமாளியை நன்றாக உதைத்து அரண்மனையைவிட்டே துரத்தி விட்டனர்.

மகாராணி, கலியமானை அடிக்கடி, "ஏய் பயந்தாங் கொள்ளி......' என்றே அழைப்பது வழக்கம். தவிர, "உங்களுடைய நாட்டில் எல்லோரும் உன்னைப் போலவே கோழைகள் தானா?" என்று கேட்பாள். இதற்குக் காரணம் கலிய



மான் அந்த ஊரில் இருந்த ஈக்களைக் கண்டு மிகவும் பயந்தது தான் ஈக்கள் என்றால் அவை எல்லாம் பெரிய பறவைகளைப் போல தடிதடியாக இருக்கும். கலியமான் சாப்பிட உட்காரும் போது 'நொய்' என்று அவர் தலையைச் சுற்றிச் சுற்றி

மொய்த்தன. உணவின் மீதும், முகம் கைகளின் மீதும் அமர்ந்து தொந்தரவு கொடுத்தன. அவை ஒரே அசிங்கமாக இருந்தன. அவற்றைப் பார்த்தாலே கலியமானுக்கு ஒரே வெறுப்பு. அந்த கோமாளி அரண்மனையில் இருந்த காலத்தில் அந்த ஈக்களைப் பிடித்து ஒளித்து வைத்திருந்து திடீரென்று கலியமான் மூக்கின் அருகில் பறக்க விட்டுத் துன்புறுத்துவான். இந்த வேடிக்கை மகாராணியை விழுந்து விழுந்து சிரிக்க வைத்தது. ஆனால் சில நாட்களுக்குப் பிறகு கலியமான் ஈக்களைத் தன் வாளால் வெட்டி வீழ்த்த ஆரம்பித்து விட்டார். கலியமான் வாள் வீசும் திறமையை மகாராணி மெச்சினாள்,

பல ஆபத்துகள் ஏற்பட்ட போதிலும் பூதநத்தத் தீவில் கலியமானுடைய வாழ்க்கை இன்பகரமாகவே இருந்தது. சிறிது காலத்திற்குப் பிறகு நகரத்தின் வெளியே போய்ச் சுற்றி வருவதற்கு கலியமான் அனுமதிக்கப் பட்டார். குணவதி கலியமானை ஒரு பெட்டியில் வைத்து இடுப்பில் கட்டிக் கொண்டு வெளியே செல்வாள். பெட்டியின் ஜன்னல் கதவுகள் வழியாக நன்றாக வேடிக்கை பார்க்க முடிந்தது. சில சமயங்கவில் குணவதி கலியமானைத் தன் கையில் எடுத்துக் கொள்வதும் உண்டு. கலியமானைப் பார்த்ததும் ஜனங்கள் கூட்ட ங் கூட்டமாகக் கூடி நின்று வேடிக்கை பார்ப்பார்கள். அவர்கள் பிரியத்துடனும் கௌரவமாகவுமே அவரை நடத்தினார்கள்.

ஆயினும் கலியமானுடைய சிறிய உருவம் தொடர்ந்து பல துன்பங்களுக்கும் காரணமாக இருந்தது. அப்போது தான் சிறிய பிராணிகளுக்கு எத்தகைய துன்பங்கள் ஏற்படக் கூடும் என்பதை நினைத்துப் பார்க்கும்படியான சந்தர்ப்பம் ஏற்பட்டது.

ஒரு நாள் கலியமான் ஆப்பிள் மரத்தடியில் நடந்து கொண்டிருந்தார். பொறாமை பிடித்த சித்திரக் குள்ளன்

அதுதான் சமயமென்று மரத்தைப் பிடித்து உலுக்கி விட்டான். பெரிய பெரிய பீப்பாய்களைப் போன்ற ஆப்பிள் பழங்கள் தட தடவென்று விழுந்தன. ஒரு பழம் கலியமான் மேல்பட்டு அவரை உருட்டிக் கீழே தள்ளிவிட்டது.

மற்றொரு நாள் குணவதி கலியமானை தோட்டத்தில் இருக்கச் சொல்லிவிட்டு ஏதோ காரியமாகச் சென்று விட்டாள் தோட்டக்காரரின் நாய் ஒன்று கலியமானை முயல் என்று நினைத்துக் கொண்டு வாயால் அலக்காகக் கௌவித் தூக்கிக் கொண்டு போய்த் தோட்டக்காரரின் முன்னால் வைத்து விட்டு வாலை ஆட்டிக் கொண்டு நின்றது. அது நன்றாகப் பழக்கப் பட்டிருந்ததால் கலியமானைக் கடிக்க வில்லை. ஆனால் அதனால் ஏற்பட்ட அதிர்ச்சியிலிருந்து மீளப் பல பல நாட்களாகி விட்டன. இதைப் போன்ற எதிர் பாராத ஆபத்துக்கள் பல. ஒரு நாள் பருந்து ஒன்று கொத் திக்கொண்டு போக முயன்றது. இன்னொரு நாள் ஒரு நத்தையின்மேல் இடறி விழுந்து காலில் அடிப்பட்டு விட்டது

இப்படிப் பல ஆபத்துக்கள் ஏற்பட்ட போதிலும் கலிய மான் தன் மனைவி மக்களையும். தாய்நாட்டையும் பற்றி நினைத்து துக்கித்தபடி தோட்டத்தில் சில சமயங்களில் தனி யாக உலவி வருவது வழக்கம். அப்போது சிறிய பறவைகள் எல்லாம் கொஞ்சம் கூடப் பயமில்லாமல் கலியமான் அருகில் வந்து தாழப் பறக்கும். அவர் கையில் ஏதாவது உணவு இருந்தால் கொத்திப் பிடுங்கிக் கொண்டு போய்விடும். அவர் அதைப் பிடுங்க முயன்றால் அவை தம் அலகுகளால் அவர் விரல்களைக் கொத்தித் துன்புறுத்தின.

ஆனால் கலியமான் மற்றவர்களுக்காகவே வாழவேண்டி யிருந்தது. தன்னைப் பற்றியும், தன் மனைவி மக்களைப் பற்றியும் நினைத்துப் பார்க்க நேரமில்லாதபடி எல்லோரும் தொந்தரவு கொடுத்து வந்தனர். மகாராணி புதிய வேடிக்கை

ஒன்றைக் கண்டு பிடித்தாள். அது அவளுக்கு மிகவும் உற்சாகமளித்ததோடு கலியமானுக்கும் பிடித்திருந்தது. கலியமானுக்குப் படகோட்டத் தெரியும் என்பதைத் தெரிந்து கொண்ட அரசி கலியமானுக்காக சிறிய படகு ஒன்றினைக் கட்டச் செய்தாள். அது மிகவும் நன்றாக இருந்தது. உடனே மகாராணி அதை எடுத்துக் கொண்டு அரசரிடம் ஓடி




னாள். அரசர் படகை ஒரு மரத் தொட்டியில் விட்டு அதில் கலியமானை உட்கார வைத்தார். கலியமான் படகை நன்றாக ஓட்டிச் செல்வதைப் பார்த்து எல்லோரும் சிரித்து மகிழ்ந்தனர். சில சமயங்களின் துடுப்பு போடுவதை நிறுத்தி

விட்டுக் கலியமான் பாய்மரத்தை விரித்துவிடுவார். உடனே மகாராணியும் அவளுடைய தோழிகளும் தங்களுடைய விசிறிகளால் வீசிப்படகு அந்த மரத்தொட்டியில் சுற்றிசுற்றி வரும்படி செய்வார்கள். பெண்கள் களைத்துப் போனால் உடனே பிரபுக்கள் வீசுவரர்கள். விளையாட்டு முடிந்ததும் குணவதி படகை எடுத்துக் கொண்டு போய்த் தன் அறையில் ஒரு கொக்கியில் மாட்டி உலர வைப்பாள்.

இத்தகைய விளையாட்டுக்களிலும் கலியமான் மிகச் சிறிய உருவம் படைத்தவராக இருந்ததால் ஆபத்துக்கள் ஏற்பட்டன. ஒருமுறை இப்படிப் படகு விட்டுக் கொண்டிருக்கும்போது ஒரு தவளை படகின் மேல் ஏறிவிட்டது. கலியமான் அந்தத்தவளையைப் போல் அசிங்கமான ஒரு பிராணியை அதுவரை பார்த்ததில்லை. அவர் மிகவும் பயந்து போனார். ஆனால் தன் கையிலிருந்த துடுப்பால் பலமாக ஒரு போடு பொட்டு அந்தத் தவளையை விரட்டி விட்டுப் படகை ஓரத்திற்கு ஓட்டிக் கொண்டு போய்ச் சேர்த்தார்.

கடைசியாகக் கலியமான் ஒரு குரங்கினிடமிருந்து தப்பிய வரலாறையும் இங்கே கூறவேண்டியது அவசியம். ஒரு நாள் கலியமான் தன் பெட்டியின் சன்னல் கதவைத் திறந்து வைத்துவிட்டு அதனுள் படுத்துக் கொண்டிருந்தார். குணவதி அறையைப் பூட்டிக்கொண்டு வெளியே போயிருந்தாள். வெளியில் ஏதோ ஒன்று பொதலென்று குதித்த சப்தம் கேட்டது. கலியமான் எழுந்து கதவைத் திறந்து கொண்டு வெளியே எட்டிப் பார்த்தார். அறையினுள் குரங்கு ஒன்று எப்படியோ புகுந்து விட்டது. அது என்ன விஷமத்தனம் செய்யலாம் என்று இங்கும் அங்கும் பார்த்துக் கொண்டிருந்த நேரத்தில் கலியமான் கதவைத் திறந்துவிட்டார். கலியமானைப் பார்த்தவுடன் குரங்கு அவரை நோக்கித் தாவியது. கலியமான் கதவை அடைப்பதற்குள் குரங்கு

அவரைப் பிடித்து வெளியே இழுத்துக் கொண்டது. சிறிது நேரம் அவரைத் தன் கையில் வைத்துப் பார்த்துக் கொண்டிருந்தது. கலியமானை குரங்குக் குட்டி என்று நினைத்திருக்க வேண்டும். ஒரு கையால் கலியமான் முகத்தை அன்போடு வருடியபடி தன் நெஞ்சோடு அணைத்துக் கொண்டது.

இந்தச் சமயத்தில் வெளியே ஏதோ சப்தம் கேட்கவே, பயந்து போன குரங்கு வெளியே தாவிக் கூரையின்மேல் ஏறிக் கொண்டது. ஒரு காலில் கலியமானைப் பிடித்துக் கொண்டு மூன்று காலால் கூரையின் மேல் நடந்தது. குணவதி அலறினாள். கலியமானைக் குரங்கு தூக்கிக் கொண்டு போவதைக் கண்டு அவள் போட்ட கூச்சலைக் கேட்டு அரண்மனைச் சேவகர்கள் ஓடி வந்தனர். குரங்கைப் பிடிப்பதற்காக ஏணிகளைத் தூக்கிக் கொண்டு வந்தனர். கீழே நூற்றுக் கணக்கான மக்கள் கூடிவிட்டார்கள். பெரிய பரபரப்பு ஏற்பட்டு விட்டது. குரங்கு ஒரு கையில் கலியமானைப் பிடித்துக் கொண்டு இன்னொரு கையால் தன் குட்டிக்கு உணவூட்டுவதைப் போல கலியமான் வாயில் உணவைத் திணிக்க முயன்றது. கலியமான் இப்படியும் அப்படியும் தலையசைத்தபோது குரங்கு தன் குட்டியை சமாதானம் செய்வதுபோல் அவரைச் சமாதானம் செய்ய முயன்றது. கீழே நின்று வேடிக்கை பார்த்தவர்கள் அதைப் பார்த்துச் சிரித்தனர். கலியமான் ஒருவருக்குத் தவிர மற்றவர்களுக்கெல்லாம் அது நல்ல வேடிக்கையாகத்தானிருந்தது.

அரண்மனைச் சேவகர்கள் நாலா பக்கத்திலிருந்தும் ஏணிகளின் மேல் ஏறிக் கூரையின்மேல் வந்துவிட்டதைக் கண்டதும் குரங்கு கலியமானைக் கூரையின் மேலேயே போட்டு விட்டு ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து தப்பித்துக் கொண்டு ஓடி விட்டது. அதன் பின் ஒரு வேலைக்காரன் கலியமானை எடுத்துத் தன் சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டு மெது

வாகக் கீழே இறங்கி வந்து அவரைக் குணவதியிடம் ஒப்பு வித்தான்.

குரங்கு வாய்க்குள் திணித்த ஏதோ அசிங்கமான பொருளால் கலியமானுக்கு மூச்சுத் திணறிக் கொண்டிருந் தது. குணவதி அவற்றை எடுத்துவிட்டு வாயைத் துடைத்து விட்டாள், அதன்பின் இரண்டுவாரம் உடல்நிலை சரியில்லா மல் படுத்துவிட்டார். அந்த நிகழ்ச்சி, அரசரையும் அரசியை யும் கூட மிகவும் கவலை கொள்ள வைத்துவிட்டது.

இந்த ஆபத்து கலியமானுடைய மனநிலையை மிகவும் பாதித்து விட்டது. தனக்கு ஏற்பட்ட அவமானத்தை நினைத்துக், கலியமான் வருந்தினார். அரசர் உள்பட எல் லோரும் சிரிக்கும்படியாக ஏற்பட்டு விட்டதை அவரால் தாங்க முடியவில்லை. ஒவ்வொரு நாளும் இந்த மாதிரி ஏதாவது நடந்து கலியமானை மேலும் மேலும் சிறுமைப் படுத்தி வந்தன.

# 6

பூதநத்த அரசர் இசைப் பிரியர். அடிக்கடி அரசவையில் ஏதாவது இசைக் கச்சேரி நடைபெறும். அதற்கு கலிய மானையும் கொண்டு வரச் சொல்வார். ஆனால் அந்நாட்டு இசைக் கருவிகளின் முழக்கம் கலியமானுக்கு போர் முரசங் கள், துத்தாரிகள், துந்துபிகள் முழங்குவதைப் போல் இருக் கும். கலியமான் உடனே தன் பெட்டியின் கதவுகள், சன்னல்

கள் எல்லாவற்றையும் அடைத்துத் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு உட்கார்ந்து கொள்வார். அதன் பிறகு இசையைக் கேட்க இன்பமாகவே இருக்கும்.

சிறு வயதிலிருந்து கலியமான் நன்றாக வீணை வாசிப்பார். குணவதி தன் அறையில் வீணை ஒன்று வைத்திருந்தாள். அதைப் பார்த்த கலியமான் அரசரையும் அரசியையும் மகிழ்விப்பதற்காக அதை வாசிக்க விரும்பினார். ஆனால் அந்த வீணை மிகவும் பெரியதாக இருந்தது. வாத்தியக் கருவிகளுக்கு முன் அதே அளவு நீளமுள்ள ஒரு நாற்காலியைப் போடச் சொன்னார். கையில் இரண்டு பெரிய மரக் குச்சிகளை எடுத்துக் கொண்டு நாற்காலியின் மேல் முன்னும் பின்னும் ஓடியபடி வீணையை வாசித்தார். அரசர் பெரிதும் விரும்பி ரசித்தார், ஆனால் சிறிது நேரம் வாசிப்பதற்குள் கலியமான் மிகவும் களைத்துப்போய் விட்டார். ஒரு வரி வாசிப்பதற்கு அவர் சுமார் ஒரு மைல் தூரம் ஓடவேண்டியிருந்தது.

அரசருக்குப் பிடித்திருந்த மற்றொரு விஷயம் கலியமான் அவருடைய தாய்நாட்டையும், மற்ற இந்திய நாடுகளைப் பற்றியும் பேசக் கேட்பது. இந்திய அரசியல், மதம், பண்பாடு கலாச்சார பழக்க வழங்கங்களில் பெரிதும் ஈடுபாடு காண்பித்தார். கலியமான் தம் தாய்நாட்டைப் பற்றிப் பெருமையோடு பேசிய போதிலும் அரசர் அந் நாட்டவரைப் பற்றிச் சண்டைக்காரர்கள் என்றே நினைத்தார். பூதநத்தத் தீவில் போர் என்ற பேச்சே கிடையாது. வெடிகுண்டுகள், பீரங்கிகளும் கிடையாது. அதனால் மக்களுக்கு அபாயமும் கிடையாது. இந்திய நாடுகளில் நடைபெற்ற போர்களைப் பற்றி கேள்விப்பட்ட அரசர் முதலில் அவற்றை நம்பவே இல்லை பிறகு கலியமான் கூறுவது உண்மையானால் அவர்களைவிட பயங்கரமான வெறிகொண்ட சிறிய பிராணிகள் பூலோகத்திலேயே இருக்க முடியாது என்றார்.

கலியமான் வெடி மருந்து தயாரிக்கும் முறையைச் சொல்லிக்கொடுத்து அவரது படை வலிமையை அதிகரிக்க உதவுவதாகக் கூறினார். ஆனால் அரசர் அதைக் காதில் போட்டுக் கொள்ளவே இல்லை. அப்படிப்பட்ட பயங்கரமான விஷயத்தைத் தெரிந்து கொண்டு லாபம் அடைவதைவிடத் தன் நாட்டில் பாதியை இழந்துவிடத் தயாராக இருப்பதாகவும் கூறினார். தம் நாட்டிலுள்ள வழக்கு மன்றங்களையும், வழக்கு விசாரணைகளையும், தண்டனைகளையும் பற்றிக் கலியமான் கூறியதும் அரசர் வெகுண்டார். பூதநத்தம் தீவில் சட்ட திட்டங்கள் மிகவும் குறைவு எல்லா மக்களாலும் எளிதில் புரிந்து கொள்ளக் கூடிய எளிய சட்ட திட்டங்களே அமுலில் இருந்தன அதனால் வழக்கறிஞர்களும், வழக்கு மன்றங்களும் மிகவும் குறைவாகவே இருந்தன.

பூதநந்தத் தீவு மக்கள் அச்சடித்துப் புத்தகம் வெளியிடும் கலையையும் அறிந்திருந்தார்கள். ஆனால் மிகவும் குறைந்த எண்ணிக்கையில்தான் புத்தகங்கள் வெளி வந்தன. அரசாங்கத்திலிருந்த மிகப் பெரிய நூலகத்திலேயே சுமார் ஆயிரம் புத்தகங்கள்தான் இருந்தன. எல்லாப் புத்தகங்களையும் கலியமான் படிக்க விரும்பினார். ஒவ்வொரு புத்தகமும் சுமார் இருபத்தைந்தடி உயரமிருந்தது. கலியமானின் விருப்பத்தை அறிந்த அரசர், கலியமான் படிப்பதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து தரும்படி ஆணையிட்டார். சுமார் இருபத்தைந்தடி உயரமுள்ள ஏணி ஒன்று செய்து நிறுத்தி வைக்கப்பட்டது. எதிர்ப்புறத்தில் புத்தகமும் திறந்து வைக்கப்பட்டது. கலியமான் மேல் படியில் ஒரு புறத்திலிருந்து மறுபுறம் வரை நடந்து கொண்டே ஒரு வரியைப் படிப்பார் அடுத்தபடியில் இறங்கி நடந்து சென்று அடுத்த வரியைப் படிப்பார். இங்ஙனமே மேலும் கீழும் பல மைல் தூரம் நடந்து நடந்து அந்நாட்டிலிருந்த பெரும்பாலான புத்தகங்களையெல்லாம் படித்து முடித்தார்.

பூதநத்தத் தீவின் அரசர் போரையும், வன்முறைகளையும் விரும்பவில்லை என்றாலும் திறமையான பெரிய காலாட் படையையும், குதிரைப் படையையும் வைத்திருந்தார்.

பூதநத்தத்துக்கு அருகில் வேறு நாடுகளே இருக்கவிலலை- எனவே அந்நியர் படையெடுப்பு அச்சத்திற்கே இடம் கிடையாது. அப்படியிருந்தும் எதற்காக அவ்வளவு பெரிய படைகளை வைத்திருக்கிறார் என்று கலியமானுக்கு ஆச்சரியமாக இருந்தது. அப்படைகள் உள்நாட்டுக கலவரங்களை அடக்குவதற்காகவே இருக்கின்றன என்பதைப் பின்னர் தெரிந்துக் கொண்டார். முனபு பூதநத்தத்தில் பல்வேறு அரசியல் கட்சிகள் இருந்தன அவற்றிற்குள் கலகங்கள் ஏற்படும்போது இப்படைகள் பயன்படுத்தப் பட்டன தவிர இப்படைகள் நிரந்தரமாக இருக்கவில்லை. ஊதியம் பெறும வீரர்களும் கிடையாது. தேவை ஏற்படும் போது நாட்டிலுள்ள வியாபாரிகளும், விவசாயிகளும் படைகளாகத் திரட்டப்படுவார்கள். ஒவ்வொரு வியாபாரியும் விவசாயும் படையில் சேர்ந்திருந்தார். முறை வைத்துக் கொண்டு குறிப்பிட்ட காலங்களில அவர்கள் ராணுவ சேவை செய்தார்கள். இதற்காக அவர்களுக்கு எவ்வித ஊதியமும் கிடையாது.

ஒரு முறை கலியமான் இருபத்தையாயிரம் காலாட் படை வீரர்களும், ஆறாயிரம் குதிரைப் படை வீரர்களும் நடத்திய அணிவகுப்பு ஒன்றைப் பார்த்து வியப்படைந்தார். அதைப் போன்ற ஒரு பிரமாண்டமான காட்சியைக் கலியமான் பார்த்ததே கிடையாது. குதிரை மேல் அமர்ந்த வீரன் ஒவ்வொருவனும் சுமார் நூறு அடி உயரம் இருந்தான். அவர்கள் தங்கள் வாட்களை உருவிச் சுழற்றியபோது வானத்தில் ஒரே நேரத்தில் ஆறாயிரம் மின்னல்கள் தோன்றியதைப் போலிருந்தது.

7

என்றாவது ஒருநாள் தன் தாய் நாட்டிற்குத் தப்பித்துச் சென்று விட முடியும் என்பதில் கலியமானுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது. ஆயினும் தப்பித்துச் செல்வது என்பது நடக்கக்கூடிய காரியமாகத் தோன்றவில்லை. பூதநத்த வாசிகள் கப்பலையே பார்த்ததில்லை. கலியமான் வந்த கப்பல்தான் அவர்கள் முதன் முதலாகப் பார்த்த கப்பல். அதற்கு முன் அவர்கள் கப்பலைப் பற்றியோ, கடற் பிரயாணத்தைப் பற்றியோ அறிந்ததில்லை ஆனால் அதன் பின்னர் அத்தகைய கப்பல் ஏதேனும் தென்பட்டால் அதனைப் பிடித்து அதில் பிரயாணம் செய்த மாலுமிகளோடு அப்படியே தன்னிடம் கொண்டு வந்து சேர்க்க வேண்டும் என்று அரசர் கண்டிப்பாக ஆணையிட்டிருந்தார்.

எல்லோரும் கலியமானை மிகவும் அன்புடன் நடத்தினார்கள். அரசருக்கும் அரசிக்கும் அவர் தான் செல்லப் பிள்ளை. பிரபுக்கள், சீமாட்டிகள் எல்லோருக்கும் மிகவும் பிடித்தவர். ஆனால் கலியமானுக்குத் தமது தாழ்த்த நிலை அடியோடு பிடிக்கவில்லை. தன் மனைவி மக்களைப் பற்றிய எண்ணங்கள் அவர் நெஞ்சில் அலைமோதின. தன்னைப் போன்ற மனிதர்கள் வாழும் நாட்டில் தலை நிமிர்ந்து நடக்கவும் மற்றவர்களோடு சமமாகப் பழகவும் விரும்பினார். எங்கே ஒரு தவளை தன்னை மிதித்து விடுமோ எலி தின்றுவிடுமோ என்று பயந்து பயந்து வாழும் நிலையிலிருந்து மீள வேண்டும் என்று தவித்தார். கலியமான்

எதிர்பார்த்ததைவிட விரைவிலேயே விடுதலை மிக அதிசய மான முறையில் கிடைத்தது.

கலியமான் அந்தத் தீவுக்கு வந்து சுமார் இரண்டு வருடங்கள் ஆனபின்னர் ஒரு நாள் அரசரும், அரசியும் தங்கள் நாட்டின் தென்பகுதியைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட் டனர் குணவதியையும், கலியமானையும் தங்களுடன் அழைத்துச் சென்றனர். குணவதி கலியமான் இருந்த பெட் டியை எடுத்துக் கொண்டாள். பெட்டியினுள் ஒரு நீண்ட ஊஞ்சல் கட்டி வசதியான படுக்கை அமைத்துக் கொண்டிருந் தார் கலியமான். பிரயாணத்தின் போது படுத்துக் கொண்டு தூங்குவதற்கு மிகவும் சௌகரியமாக இருந்தது. பெட்டியின் உட்பக்கம் காற்று வீசுவதற்கு வழியாகப் பெட்டியின் மேல் ஓர் சன்னல் இருந்தது. அதற்கும் கதவு இருத்தது.

அரசருடைய வசந்த மாளிகைக்கு வந்து சேர்ந்தபோது குணவதியும், கலியமானும் மிகவும் சோர்ந்து போய்விட்டனர், குணவதியால் எழுந்திருக்கவே முடிவில்லை. கலியமானுக்குக் கடற்கரைப் பக்கம் போய்ப் பார்க்க வேண்டும் என்று ஆசை. என்றைக்காவது ஒரு நாள் கடல் மார்க்கமாகத்தான் தான் தப்பிச் செல்ல வேண்டும் என்பதால்; தான் மிகவும் சோர் வாக இருப்பது போலவும் கடற்கரைக்குப் போய்க் காற்று வாங்க விரும்புவதாகவும் குணவதியிடம் கூறினார். முதலில் குணவதி மறுத்தாள். ஆனால் கலியமான் வற்புறுத்தவே ஒரு வேலைக்காரனை அழைத்து, கலியமானைப் பெட்டி யுடன் கடற்கரைக்கு எடுத்துப் போகும்படியும், மிகவும் கவனமாகப் பாதுகாத்து அழைத்து வரும்படியும் கூறி அனுப்பினாள். பெட்டியை வேலைக்காரன் எடுத்துக் கொண்டு புறப்பட்டபோது குணவதி திடீரென்று அழுதுவிட் டாள். ஒரு வேளை பின்னால் என்ன நடக்கப் போகிறது என்பதை அவளுடைய உள்ளுணர்வு உணர்த்தியதாலோ என்னவோ!

வேலைக்காரன் கலியமான் இருந்த பெட்டியை எடுத்துக்கொண்டு போய்க் கடற்கரைக்கு அருகே இருந்த ஒரு பாறையின் மீது வைத்தான். சிறிது நேரம் கலியமான் சன்னல் வழியாக கடலலைகளையே பார்த்துக் கொண்டிருந்தார். தன் வீட்டு ஞாபகம் வந்துவிட்டது. மிகவும் சோர்வாக இருந்ததால் அவ்வேலைக்காரனிடம் தான் தூங்கப் போவதாகச் சொல்லிவிட்டு, சன்னல் கதவையும் மூடிவிட்டுப் படுத்துக் கொண்டார். அவ்வேலைக்காரன் பெட்டியை அங்கேய வைத்துவிட்டு எங்கோ சென்றுவிட்டான். சிறிது நேரம் கழித்து கலியமான் கதவைத் திறந்து பார்த்தபோது அவனைக் காணவில்லை. உடனே கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்து கடலை நோக்கி நடந்தார். ஏதாவது கப்பல் வராதா? கலியமான் மிக ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தார். கண்ணுக்கெட்டிய தூரம்வரை எதுவும் காணப்படவில்லை, சற்று தூரத்தில் ஒரு பெரிய கிளிக் கூண்டு காணப்பட்டது. கடற்கரையில் யார் அதைக் கொண்டு வந்து வைத்திருப்பார்கள்? வியப்புடன் பார்த்தபடி அதை நோக்கி நடந்தார். அந்தக் கிளிக் கூண்டு நன்றாகவே இருந்தது. கலியமான் அதன் கதவைத் திறந்து மூடிப் பார்த்தார். அதே சமயத்தில் வானத்திலிருந்து திடீரென்று ராட்சசக் கழுகு ஒன்று பாய்ந்து வந்தது. கலியமான் சட்டென்று அந்தக் கூண்டுக்குள் தாவிக் கதவை உள்பக்கம் தாழ்ப் போட்டுக் கொண்டார். கழுகு கூண்டுடன் கலியமானையும் அப்படியே அலக்காகத் தூக்கிக் கொண்டு ஆகாயத்தில் பறந்தது.

**பயம்! திகில்!**

கலியமான் கத்தினார். கதறினார். ஒன்றும் நடக்கவில்லை. தான் இனி உயிர் பிழைக்கப் போவதில்லை என்று நிச்சயமாகத் தோன்றிவிட்டது. மேற் கொண்டு கூச்சல் போடுவதற்குச் சக்தி இருக்கவில்லை. கழுகு கடலின் மேல்

பறந்து கொண்டிருந்தது. மேலே ஆகாயம். கீழே கொந்தளிக்கும் கடல் நாற்புறமும் பார்த்த இடம் எல்லாம் நீலநிற வானும், மேகக் கூட்டங்களுமே காட்சியளித்தன. அந்த நேரத்தில் கலியமானுக்கு எப்படி இருந்திருக்கும் என்பதை



வர்ணிக்க முடியுமா? கூச்சல் போடுவதற்குச் சக்தி இல்லை. சிந்திப்பதற்கும் திறனில்லை. அவருடைய உணர்வும் புலன்கள் யாவும் மரத்துப்போய் விட்டன. ஆனால் ஆபத்து அத்துடன் நீங்கிவிடவில்லை.

ஆலையில் சங்கு ஊதுவதைப் போல் பலத்த ஓசை கேட்டது. கலியமான் திரும்பிப் பார்த்தார். இன்னொரு கழுகு பலமாகக் கத்தியபடி வெகு வேகமாக வந்து கொண்டிருந்தது. அதைப் பார்த்தவுடன் கூண்டைத் தூக்கிச் சென்று கொண்டிருந்த கழுகு அதை எதிர்த்துப் போரிடத் தயாராகிவிட்டது.

இரண்டு மலைகள் மோதிய மாதிரி ஓசை செவியைப் பிளந்தது. இரண்டு கழுகுகளும் ஒன்றுடன் ஒன்று மோதிப்பல மாகப் போரிட்டன. ஒன்றை ஒன்று இறகுகளால் அடித்தன. அலகுகளால் கொத்திக் கொண்டன. பயங்கரமாக இருந்தது அந்தப் போர். கலியமான் இருந்த கூண்டு குறுக்கும் நெடுக்கு மாக வீசப்பட்டது. கலியமான் கழுத்து முறிந்து இறந்தே போயிருப்பார். அதற்குள் முதல் கழுகு பெட்டியை விட்டு விட்டதால் அது வெகு வேகமாகச் சென்று தொப்பென்று கடலுக்குள் விழுந்தது. அத்துடன் தன் கதை முடிந்து விட் டது என்று கலியமான் நினைத்தார், அவருக்கு நினைவு தப்பி விட்டது.

கடல் அலைகள் தொடர்ந்து முகத்தின் மேல் விழுந்து கொண்டிருந்ததால் சிறிது நேரத்திற்குப் பிறகு கலிய மானுக்கு நினைவு வந்து விட்டது. அந்தக் கூண்டு தெப்பம் போல் மிதந்து கொண்டிருப்பதை உணர்ந்தார். தவிர அது ஒரே திசையில் இழுத்துச் செல்லப்படுவதையும் உணர முடிந் தது. சுற்று முற்றும் வேறு கப்பலோ பெரிய சுறா மீனோ எதுவும் தென்படவில்லை. கடலில் ஓடும் நீரோட்டம் ஒன் றால் கூண்டு இழுத்துச் செல்லப்படுவது தெரிந்தது. ஆனால் .........அன்ன ஆகாரமில்லாமல் குடிக்க தண்ணீர் இல்லாமல் எத்தனை நாள் தான் உயிருடன் இருக்க முடியும்?

கழுகுகள் நடத்திய போராட்டத்தின்போது பட்ட காயங் களால் உடல் எல்லாம் வலித்தது, ஜுரம் வரும் போல் இருந்தது. பசி வயிற்றைக் கிள்ளிற்று. தாகத்தால் நாவரண் டது. கண்களை மூடிக்கொண்டு அப்படியே படுத்து விட்டார்.

## 8

கலியமான் எத்தனை நாட்கள் அதே நிலையில் இருந்தி ருப்பார் என்பது அவருக்கே தெரியாது. இடையில் ஒருநாள்

தன் கூண்டு எதனாலோ இழுக்கப்படுவது தெரிந்தது. ஆனால் அவற்றைப் பற்றி முழுவதாகத் தெரிந்து கொள்ளக் கூடிய நிலையில் கலியமான் இருக்கவில்லை.

பிறகு ஆழ்ந்த தூக்கத்தில் லயித்துப் போய்க் கிடந்தார். தூக்கத்தில் தான் பேசுவதைப் பலமுறை உணர்ந்தார். பிறகு கொஞ்சம் கொஞ்சமாகத் தனக்கு நினைவு திரும்பிச் சொண்டிருப்பது அவருக்குத் தெரிந்தது. தன் அருகில் ஆட்கள் நடமாடுவதை உணர்ந்தார். ஒருநாள் அவர் விழித்துப் பார்த்த போது தன்னைப் போன்ற மனிதர்களிடையே இருப்பதைப் பார்த்த போது அவருக்கு ஆச்சரியம் தாங்கவே இல்லை! 'கடவுளே! இது உண்மையா?......நான் உயிருடன் தான் இருக்கிறேனா?' என்று அலறினார்,

சிரித்த முகத்துடன் ஒரு மனிதர் ''ஆம் கவலை வேண்டாம். நீங்கள் உயிருடன் தான் இருக்கிறீர்கள்''என்று பதில் கூறினார்.

கலியமான் திகைப்புடன் கேட்டார். 'நீங்கள் யார்?'

'நான் இந்தக் கப்பலின் மருத்துவர்.'

நானும் தான், நான் ஒரு கப்பலில் மருத்துவராக இருந்தேன்,' என்றார் கலியமான்.

முதலில் அவர் நம்பவில்லை. ஆனால் கலியமான் சில மருத்துவ முறைகளைக் கூறியதும் அவருக்கு நம்பிக்கை ஏற்பட்டது.

அதற்குள் கலியமானைப் பார்ப்பதற்கு எத்தனையோ பேர் வந்து போய் விட்டார்கள். அந்தக் கப்பல் தலைவர், அதிகாரிகள். மாலுமிகள். பிரயாணிகள் எல்லோருமே வந்து பார்த்தார்கள். அது பிரயாணிகளை ஏற்றிச் செல்லும் பாண்டிய நாட்டுக் கப்பல் !

கலியமானுக்கு கொஞ்சம் உடல் தேற ஆரம்பித்ததும் கப்பல் தலைவர் அவரை அழைத்துப்போய் அந்தக் கூண்டைச் சுட்டிக் காட்டினார். 'அது என்ன அது? கிளிக் கூண்டு மாதிரி இருக்கிறதே?' என்று கேட்டார்.

'உண்மையிலேயே அது ஒரு கிளிக் கூண்டுதான்!' என்று கலியமான் கூறியதும் கப்பல் தலைவர் சிரித்தார். 'இவ்வளவு பெரிய கிளி உலகத்தில் எங்கே இருக்கிறது? ஜன்னி கண்டு நீங்கள் பிதற்றியதை நானும் கேட்டுக் கொண்டிருந்தேன். அறுபதடி மனிதர்கள், காளை மாடுபோல் எலி, பெரிய பருந்து போன்ற ஈக்கள்......என்றெல்லாம் என்னென்னவோ பிதற்றினீர்கள் மனிதர் பேச்சு மாதிரியே இல்லாத ஏதோ ஒரு மொழியில் கத்தினீர்கள். இடை இடையே குணவதி என்ற பெயர் அடிபட்டதால் தான் உங்களுக்கு அடியோடு பைத்தியம் பிடித்துவிட வில்லை என்ற நம்பிக்கை ஏற்பட்டது......' என்றார் கப்பல் தலைவர்.

கலியமான் சிறிது நேரம் சிந்தித்தபடி படுத்திருந்தார். பிறகு அவர் கண்களிலிருந்து கண்ணீர் வழியத் தொடங்கி விட்டது. தான் அவளைப் பிரிந்து வந்த பிறகும்கூட குணவதியின் பெயர் தான் தன்னைக் காப்பாற்றியிருக்கிறது! இந்த ஜென்மத்தில் தன்னால் அவளுக்குக் கைமாறு செய்ய முடியுமா? உணர்ச்சிகளால் கலியமான் இதயம் விம்மியது.

"யார் அது குணவதி? உங்கள் மனைவியா?" என்று கேட்டார் கப்பல் தலைவர்.

கலியமான் தலையை அசைத்தார். "இல்லை. அவள் சுமார் ஐம்பதடி உயரம் இருப்பாள். மிகவும் நல்ல பெண்," என்றார்.

கப்பல் தலைவர் கலியமானை விசித்திரமாகப் பார்த்து விட்டு ஒரு சிரிப்புச் சிரித்து விட்டுப் போய் விட்டார்.

கலியமானுக்கு அப்போதுதான் உண்மையிலேயே பைத்தியம் பிடித்து விடும் போல் இருந்தது. தான் உயிர் தப்பிப் பிழைத்தது கூடப் பெரிய காரியம் அல்ல. தனக்கு உண்மையாகவே பைத்தியம் பிடித்து விடவில்லை என்று நிரூபிப்பது தான் பெரிய காரியமாக இருக்கப் போகிறது என்பதைத் தெரிந்து கொண்டார்.

கப்பல் பாண்டிய நாட்டை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது. தான் தன் தாய்நாடு செல்லப் போகிறோம் என்ற உணர்ச்சி கலியமானுக்கு உற்சாகம் அளித்தது. கடைசியாகத் தன் மனைவி மக்களையும் உற்றாரையும் காணும் வாய்ப்புக் கிடைக்கப் போகிறது. அதை நம்புவது கூட அவருக்குக் கஷ்டமாக இருந்தது.

கலியமானுக்குச் சுய நினைவு திரும்பி ஒரு வாரத்திற்கு மேல் ஆகி விட்டது. ஆயினும் கப்பல் தலைவர், மருத்துவர் மற்ற மாலுமிகள் எல்லோரும் அவரை ஒரு மாதிரி விசித்திரமாகவே பார்த்தார்கள். கலியமான் அவர்களைப் போலவே பேசி, உண்டு உடுத்துச் சாதாரணமாகக் காரியங்களைச் செய்த போதிலும் அடிக்கடி பூதம் போன்ற மனிதர்களைப் பற்றிப் பேசியதால் அவர்களுக்குச் சந்தேகமாகவே இருந்தது கலியமானுக்கு ஏதோ ஒரு விதத்தில் மூளைக் கோளாறு ஏற்பட்டிருப்பதாகவே நினைத்தார்கள்.

அதைக் கலியமான் புரிந்து கொண்டார். அவர்களுக்கு ஏற்பட்டுள்ள சந்தேகத்தைப் போக்குவது தன் கடமை என்று நினைத்தார். ஆனால் அதே சமயம் சில சமயங்களில் தான் ஏதோ சிறிய குகையில் இருப்பது போலும் தன்னைச் சுற்றிலும் இலவநத்தவாசிகளைப் போன்ற குட்டையான மனிதர்கள் உலவுவதைப் போலும், சிறிய அறை, சிறிய மேஜைகள்' நாற்காலிகள், தட்டு முட்டுச் சாமான்களை உபயோகிப்பதைப்

போலும் அவருக்குக் தோன்றியது. அதனால் சில சமயங்களில் தான் விசித்திரமாக நடந்து கொள்வதும் அவருக்குப் புரிந்தது. இரு மாறுபட்ட துருவங்களு கிடையெ தான தடுமாறிக் கொண்டிருப்பதைக் கலியமான் உணர்ந்தார். மாறுபட்ட உணர்ச்சிகள், மாறுபட்ட சூழ்நிலைகளுக்குத் தன்னைச் சரிப்படுத்திக் கொள்ள முடியாமல் திண்டாடிக் கொண்டிருந்தார்.

ஒரு நாள் கலியமான் கப்பல் தலைவரைப் பார்த்து, "நான் எப்படி இந்தக் கப்பலுக்கு வந்து சேர்ந்தேன்.........? அதை நீங்கள் சொல்லவே இல்லையே?" என்று கேட்டார்.

"நீங்கள் அந்தக் கூண்டில் மிதந்து வந்தீர்கள்... கூண்டு தான் எங்கள் கண்களுக்குக் தென்பட்டது. உள்ளே நீங்கள் இருப்பது தெரியவில்லை. ஆயினும் திருவிழாவில் தேர் வருகிறமாதிரி அது கடல் மேல அசைந்தசைந்து வந்தது மிக விசித்திரமாக இருந்தது.

"நாங்கள் எல்லோரும் கப்பல் மேல் தட்டில் நின்று வேடிக்கை பார்த்தோம். இது மாதிரி மிதக்கும் கூண்டை நாங்கள் யாரும் பார்த்ததில்லே. தஞ்சாவூர் பொம்மை எப்படி உருட்டி விட்டாலும் நிமிர்ந்து கொள்கிற மாதிரி இந்தக் கூண்டும் நிமிர்ந்து நிற்கத் தகுந்த முறையில் செய்யப் பட்டிருக்க வேண்டும் என்று நினைதோம அதை ஒரு வசித்தரப் பொருளாக நம் நாட்டிற்குக கொண்டு போகலாம் என்று நினைத்தோம்......சிலர் அதை எதிர்த்தார்கள் அதில் ஏதாவது சூனியம் வைத்திருப்பார்களோ அமங்கலப் பொருளாக இருக்குமோ? அதை வைத்துருப்பவர்களுக்கு ஏதாவது ஆபத்து வந்து விடுமோ என்றெல்லாம் பயந்தார்கள். நான் தான் துணிந்து 'வருவது வரட்டும் அதைக் கைப்பற்றிக் கொண்டு வாருங்கள்' என்று உத்தரவிட்டேன்...

"பிறகு தான் நீங்கள் உள்ளே இருப்பது தெரிந்தது. நல்ல ஜுரத்துடன் பிரக்ஞையற்ற நிலையில் கிடந்தீர்கள். நீங்கள் தமிழில் பேசியதும் குணவதீ—குணவதீ—என்று அழைத்ததும் தான் உங்களைக் காப்பாற்ற வேண்டும் என்ற ஆர்வத்தை அதிகப்படுத்திற்று. கூண்டுடன் உங்களையும் கப்பலில் ஏற்றினோம் உங்களை ஒரு தனி அறையில் வைத்து சிகிச்சை செய்யச் சொன்னேன்—பிறகு நடந்தவை உங்களுக்குத் தெரியும்......ஆமாம். நீங்கள் எப்படி இந்தக்கூண்டுக்குள் அகப்பட்டுக் கொண்டீர்கள்? யாராவது விரோதிகள் உங்களை இந்த மிதக்கும் கூண்டில் வைத்துக் கடலில் தள்ளி விட்டார்களா?'' என்று கேட்டார் கப்பல் தலைவர்.

கலியமான் வருத்தத்துடன் புன்னகை புரிந்தார். ''நான் சொல்வதை நீங்கள் நம்பப் போவதில்லை, துதிர்ஷ்டவசமாக அதை நிரூபிப்பதற்கு இந்தக் கிளிக் கூண்டைத் தவிர வேறு ஆதாரம் எதுவும் என்னிடம் இல்லை. இந்தக் கூண்டு உண்மையாகவே ஒரு கிளிக் கூண்டு தான். கடந்த இரண்டாண்டுகளாக நான் வசித்த நாட்டில் உள்ள கிளிகள் உண்மையாகவே அவ்வளவு பெரியவையாக இருந்தன என்பதை நீங்கள் நம்பாவிட்டால் நான் வேறென்ன சொல்வதாலும் பயனில்லை......'' என்றார் கலியமான்.

கப்பல் தலைவர் சிறிது யோசித்த பின், "நீங்கள் சொல்வது நம்ப முடியாததாக இருந்த போதிலும் மிகவும் சுவாரசியமாக இருக்கும் போலிருக்கிறது. நீங்கள் எப்படி பூத மனிதர்கள் வாழும் நாட்டிற்குச் சென்றீர்கள், பிறகு எப்படித் தப்பி வந்தீர்கள் என்ற வரலாற்றைக் கூறுங்கள் கேட்போம்'' என்றார்.

கலியமான் எல்லாம் விவரமாகக் கூறினார். கேட்டனுடன் கப்பல் மருத்துவரும் அதிகாரிகளும் வந்து சேர்ந்து

கொண்டனர். கலியமான் கூறிய வரலாற்றை வியப்புடன் கேட்டனர். அப்போது அவர்களுக்கு அதில் நம்பிக்கை ஏற்படாவிட்டாலும் கலியமானுடன் சில நாட்கள் பழகிப் பேசிப் பார்த்த பின்னர் அவர்களுக்குக் கொஞ்சம் கொஞ்சமாக அதில் நம்பிக்கை ஏற்படத் தொடங்கியது.

கலியமான் தன் பிரயாணக் கதைகளைப் புத்தகமாக எழுதி வெளியிட வேண்டும் என்று கப்பல் தலைவர் யோசனை கூறினார். மற்றவர்களும் அதை வற்புறுத்தினார்கள். கலியமானுக்கும் அது நல்ல யோசனையாகப் பட்டது. தான் தன் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்ததும் முதல் வேலையாக அதைச் செய்வதாகக் கூறினார்.

பூதநத்தத் தீவில் கலியமான் தங்க நேர்ந்தது பலவகையில் அவருக்குத் தொல்லையாகவே இருந்தது. கலியமான் எப்போதும் கத்திக் கத்திப் பேசிக் கொண்டிருந்தார். அதைக் கவனித்த கேப்டன் பூதநத்தத் தீவின் அரசரும் அரசியும் செவிடுகளா என்று விசாரித்தார். பூதநத்தத் தீவில் எல்லோரும் பெரிய உருவம் படைத்தவர்களானதால் அவர்கள் பேசும் போது சத்தமாகப் பேசினார்கள், பதிலுக்கு கலியமானும் உரத்த குரலில் கத்திப் பேச வேண்டியிருந்தது. கலியமான் கீழே இருந்து பேசும் போது எதிரே நிற்பவர் மலைமேலிருந்து பேசுவதைப் போன்றிருக்கும். மேலும் கலியமான் முதலில் கப்பல் மாலுமிகளைப் பார்த்தபோது அவர்கள் எல்லோரும் உருவத்தில் மிகவும் சிறியவர்களாக இருப்பது போல் கண்களுக்குத் தோன்றியதாகக் கூறினார். கப்பல் தலைவரும், அவர்கள் சாப்பிடும் தட்டு, தண்ணீர்க் குவளைகள் எல்லாம் மிகவும் சிறியவையாக இருப்பதாகக் கூறினார். பூதநத்தத் தீவில் தான் பார்த்த மக்கள் உபயோகப்படுத்தும் பாத்திரங்களைப் பற்றியும் சொன்னார்.

சில நாட்கள் பிரயாணத்திற்குப் பிறகு கடற்கரையை அடைந்தனர். கலியமானுக்குப் பரிவுடன் ஆதரவு காட்டிய கப்பல் தலைவர் கலியமான் அவருடைய வீட்டிற்குச் சென்று சேர்வதற்கும் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார். போகிற வழியிலெல்லாம் உள்ள வீடுகளும், மரம் செடி கொடிகளும் மிகவும் சிறியனவாக இருப்பதாகக் கலியமானுக்குத் தோன்றியது. அவருக்கு மீண்டும் இலவநத்தத் தீவிற்கு வந்துவிட்டோமோ என்று கூடச் சந்தேகம் ஏற்பட்டு விட்டது. வண்டியில் செல்லும்போது மனிதர்கள் நசுங்கி விடுவார்களோ என்றெண்ணி வழியை விட்டு ஒதுங்கிப் போகும்படி கத்திக் கொண்டே சென்றார். வீட்டிற்குச் சென்று கதவைத் தட்டியதும் வேலைக்காரன் கதவைத் திறந்தான். தலை நிலை வாயில் படியில் இடித்து விடாமலிருக்க மிகவும் குனிந்து சென்றார். வீட்டிலுள்ள அனைவரும் மிகவும் குள்ளமாக இருப்பதாக அவருக்குத் தோன்றியது. ஒரு வேளை அவர்கள் பட்டினிகிடந்து சிறுத்துப் போய் விட்டார்களோ என்ற சந்தேகம் கூட உண்டாகி விட்டது. ஆனால் சிறிது நேரங் கழித்து நிதானத்திற்கு வந்த பிறகு தான் அவர்கள் எல்லோரும் முன்போலவே இருப்பதையும், அவர்கள் சிறுத்துத் தோன்றியது தன் பார்வையின் கோளாறு தான் என்பதையும் புரிந்துகொண்டார்.

கலியமானை மீண்டும் உயிருடன் காணப்பெற்ற போது அவருடைய மனைவி மக்களும் உற்றார் உறவினர்களும் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவும் உண்டோ? எல்லோரும் ஆனந்தக் கண்ணீர் பெருக்கினர், கலியமானும் கண்ணீர் பெருகத் தன் பிள்ளைகளை அணைத்துக் கொண்டார்.

கலியமான் மற்றவர் காதுகள் செவிடாகும் படி மிக உரத்த குரலில் பேசியதைப் பிறகு தான் அவர்கள் கவனித்தார்கள் முதலில் கலியமான் செவிடாகிப் போய் விட்டாரோ

என்று தான் எல்லோரும் நினைத்தார்கள். பிறகு தான் அவர் காதுகள் நன்றாகவே கேட்பதைத் தெரிந்து கொண்டார்கள். கலியமான் தான் வசித்த நாட்டில் பூதங்களைப் போன்ற அறுபதடி உயரமுடைய மனிதர்களிடம் பேசிப் பேசி தனக்கு அப்படி உரத்துப் பேசிப் பழக்கமாகி விட்டது என்று கூறினார்,

எல்லோரும் வியப்புடன் அவரைப் பார்த்தார்கள். கலியமான் தன் மனைவி, மக்கள், அக்கப் பக்கத்தவர்களிடம் தன் அனுபவங்களைக் கூறியபோது அவர்களுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. அவர்கள் விழுந்து விழுந்து சிரித்தார்கள். அவருக்கு ஏதாவது மூளைக்கோளாறு தான் உண்டாகிவிட்டதோ என்றும் சந்தேகப் பட்டார்கள். ஆனால் பிறகு கொஞ்சம் கொஞ்சமாக அவர்களுக்கு நம்பிக்கை ஏற்படத் தொடங்கியது.

ஆயினும் ஒரு வேளை நிசமாகவே அவ்வளவு பெரிய மனிதர்களும் இருப்பார்களா? அல்லது எல்லாம் கலியமானுக்கு ஏற்பட்ட சித்தப் பிரமை காரணமாக உண்டான பைத்தியக்கார கற்பனைகளாக இருக்குமோ? என்ற சந்தேகங்களின் காரணமாக மறுபடியும் அவர் உடல் கடல் பிரயாணமே செய்யக் கூடாது என்று தடுத்து விட்டார்கள்.

முற்றும்

உலக இலக்கியங்கள் வரிசை

# அல்லி கண்ட அதிசய உலகம்

# Alice In Wonderland

வெள்ளை முயல் ஒன்று தன் சட்டைப் பையிலிருந்து கடிகாரத்தை எடுத்துப் பார்த்துவிட்டு ''ஐயய்யோ நேரமாயிட்டுதே'' என்று சொல்லிக் கொண்டு ஓடுகிறது.

அதைப் பின் தொடர்ந்து செல்கிறாள் அல்லி!

சீட்டுக் கட்டு ராஜா ஆட்சி புரியும் நாட்டில் ஆட்டின் ராணி பார்த்தவரையெல்லாம் தலையைச் சீவும்படி உத்தரவிடுகிறாள்.

இதைப் போன்ற விசித்திரமான ஒரு நவீனத்தை நீங்கள் படித்திருக்கவே முடியாது. வலை ரூ 3-00

உலக இலக்கியங்கள் வரிசையில் இதுவரை

| வெளிவந்துள்ள நூல்கள் | விலை |
|---|---|
| 1. மின்னல் வீரன்<br>Scarlet Pimpernel | ரூ 3-95 |
| 2. பாலைவனப் புதையல்<br>Kings Solomon's Mines | ரூ 3-00 |
| 3. கடல் கொள்ளைக்காரன்<br>Captain Blood | ரூ 5-35 |
| 4. பாய்ந்து வரும் ஓநாய்<br>Hound of Baskerville | ரூ 3- 0 |
| 5. புதையல் தீவு<br>Treasure Island | ரூ 3-00 |
| 6. இரு நகரங்களின் கதை<br>Tale of Two Cities | ரூ 5-00 |
| 7. மர்மத்தீவு மனோகரன்<br>Count De Montechristo | ரூ 5-95 |



பதிவுத் தபாலில் பெற தேவையான புத்தகங்களின் விலையுடன் ரூ 3-25 சேர்த்து அனுப்புக.

## தாமரை நூலகம்

67, வன்னியர் தெரு, சூளைமேடு, சென்னை-94.

